# Bibliographical Data


| | | |
|---|---|---|
| Title | : | PATTU PAATTU CAMAYANGAL |
| Author | : | Dr. G. NARASIMHAN, M A ,M.Phil ,Ph.D.; |
| Language | : | Tamil |
| Subject | : | Philosophical concepts in Tamil and Telugu Literatures |
| Edition | : | Firsi Edition 1994 |
| Price | : | Rs. 20/- |
| No. of copies | : | 1000 copies |
| Copy right | : | Author |

---

"This book is published with the Financial Assistance of Thirumala Tirupati Devasthanams under their Scheme"

"Aid to Publish Religious Books"

Printed by :

Sri Velavan Press
Tiruttani - 631 209.

இந்நூலினை
என் பெற்றோர்க்குக்
காணிக்கையாக்குகிறேன்



திரு. T. கோவிந்தசாமி ரெட்டியார்

திருமதி. இராமம்மாள்

# என்னுரை

*டாக்டர். கோவி. நரசிம்மன்,*
எம்.ஏ.,எம்ஃபில்.,பிஎச்.டி.,
தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் பல்கலைக்கழகம்,
அனந்தபுரம் - -515 003. (ஆ.மா.)

சூரியனையும் அதன் ஒளிக்கதிர்களையும் பிரித்தல் அரிது. அதுபோன்று மனிதனையும் சமயத்தையும் பிரிக்க வியலாது. பண்டைக் காலப் புலவர்களின் நூல்களைக் காண்போமாயின் அவற்றில் சமயக் கருத்துக்கள் மிகுந்துள. அவற்றை இலக்கியங்களின்று தொட்டுக்காட்ட எழுந்த சிறு முயற்சியே இந்நூலாகும். பல சமயங்களின் விளக்கக் கருவூலமாகப் பத்துப்பாட்டு அமைவதையும் பரிபாடல், சிலப்பதிகாரம், கம்பராமாயணம் ஆகியனவற்றுள் திருமால் குறித்த செய்திகளையும் பாமரமக்கள் முருகனை உள் நினைந்து உருகிப்பாடும் காவடிப்பாட்டைக் குறித்தும் பொங்கல் திருநாள் எவ்வாறு சமய அடிப்படையில் அமைந் துள்ளது எனவும் இந்நூலுள் விளக்கப் பட்டுள்ளது. மேலும் 'இன்பமே ஒரு நாளும் துன்பமில்லை' என இறைவனை எண்ணி வாழ்ந்த நக்கீரர், இராமதாசரின் பக்தி வாழ்வை இறுதியான இரு கட்டுரைகளும் விளக்குகின்றன.

இந்நூலுக்கு அழகியதொரு அணிந்துரை நல்கிய என் பேராசிரியப் பெருந்தகை முனைவர் பொன். சௌரிராசனார் எம்.ஏ.,பிஎச்.டி., பட்டயம்-மொழியியல் அவர்களுக்கும்

இந்நூலுக்கு ஆங்கில முன்னுரை வழங்கிய ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் பல்கலைக் கழகத் தெலுங்குப் பேராசிரியர் எச். எஸ். பிரமானந்தா, எம்.ஏ., (தெலுங்கு) எம்.ஏ.,

(மொழியியல்) பிஎச்.டி., அவர்களுக்கும், என் நலத்தில் கவனம் கொண்டு அல்லும் பகலும் பாடுபட்டு என்னை ஆளாக்கி, அதோடு மட்டுமின்றி இந்நூல் உருப்பெற ஊக்க மளித்து, என் நூலைத் தம் நூலாய் எண்ணி அச்சுப்படிகளைத் திருத்தி முழுமைப் பெறச் செய்த என் தமையனார் திருமிகு. கோவி. அரங்கநாதன், ஆசிரியர் அவர்களுக்கும் அண்ணியார் திருமதி. இலக்குமி அரங்கநாதன் அவர்களுக்கும் என்றும் நன்றி கடப்பாடுடையேன்.

இந்நூலைப் பதிப்பிக்க பொருளுதவி செய்தருளிய திருமலை திருப்பதி தேவஸ்தான நிருவாக அதிகாரி அவர்களுக்கும், சப்தகிரி சமய மாத இதழ் தமிழ்ப்பிரிவு துணை யாசிரியர் திரு. என். எஸ். இராமமூர்த்தி, எம்.ஏ., அவர்களுக்கும் என் நன்றி பல.

இந்நூலினை அழகுற அச்சிட்டளித்த என் இனிய நண்பரும் ஸ்ரீ வேலவன் அச்சக உரிமையாளருமான திரு. ஆர். நாராயணமூர்த்தி அவர்களுக்கும் என் நன்றி உரித்து.

அனந்தபுரம். — கோவி. நரசிம்மன்

# அணிந்துரை

*டாக்டர். பொன். சௌரிராசன்,*
எம்.ஏ.,பிஎச்.டி., பட்டயம் - மொழியியல்
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு)
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்,
திருப்பதி - 517 502.

மொழிவழி வாழ்க்கையை உணர்த்துதல் இலக்கியமாகும். அவ்விலக்கியத்தில் சமூக, சமய, பொருளாதார கருத்துக்கள் உட்பொதிந்துள. இலக்கியத்தில் பொதிந்துள்ள சமூகக் கருத்துக்களை, சமயக் கருத்துக்ளை, பெருளாதாரக் கருத்துக் களை, வெளிக்கொணருதல் இன்றைய ஆய்வின் ஒரு பகுதி யாக அமைகின்றது. இந்நூலாசிரியர் தமிழ், தெலுங்கு இலக்கியங்களை நுண்மான் நுழைபுலத்தோடு கற்று இறை கருத்துக்கள் நிறைந்துள்ள இந்நூலை வெளிக் கொணர்ந் துள்ளார்.

இந்நூலில் எட்டு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. ‘பத்துப்பாட்டுச் சமயங்கள்’ எனும் முதல் கட்டுரை இயற்கைத் தெய்வங்களான ஞாயிறு, திங்கள் ஆகியன பற்றியும் வேதத் தைப் பற்றியும் கூறுகின்றது. காடுறைக் கடவுளான மாயோ னைத் தலைமைத் தெய்வமாகக் கொண்டது வைணவசமயம். இச்சமயக்கருத்துக்கள் நிரலே தொகுத்துத் தரப்பெற்றுள்ளது. மேலும் சைவமதத்தை விளக்குகையில் காரியுண்டிக் கோயில் பற்றியும் விளக்கப் பெற்றுள்ளது. முருகனைப் போற்றி வழிபடும் சமயம் கௌமாரமாகும். ஈண்டு முருகனின் பிறப்பு, வளர்ப்பு, அறுபடை வீடுகளில் அழகனின் நிலை முதலியன பற்றிப்பாங்குடன் உரைக்கப்பட்டுள்ளது.சமன பௌத்த மதத் தத்துவங்கள் பற்றியும் அவை பத்துப்பாட்டில் எவ்வாறு இடம் பெற்றுள்ளன எனவும் ஆயப்பட்டுள்ளது.

திருமாலிருஞ் சோலைமலையின் இயற்கை எழிலையும் அம்மலையின் சிறப்பையும் இளம்பெருவழுதியார் பரிபாடலின் பதினைந்தாம் பாடலில் விளக்கியுள்ளார் அதுவே இரண்டாம் கட்டுரையாக அணி செய்கின்றது.

வாமன், இராமன், கண்ணன், மானுடமடங்கல் ஆகிய திருமால் அவதாரங்களை இளங்கோவடிகள் தம் காப்பியப் பகுதியில் விளக்கப்பட்ட செய்தியை 'ஆய்ச்சியர் குரவையில் அவதார மகிமை' எனும் கட்டுரை ஆய்கின்றது.

'இராமாவதாரம்' எனும் நான்காம் கட்டுரை தசரதன் மதலையான இராமன் அவதரித்ததைக் கம்ப ராமாயணம் வழி நின்று விளக்கப்பெறுகின்றது.

அழகனின் திருத்தலங்களுள் ஒன்று திருத்தணி. அவ்வூரில் ஆடிக்கிருத்திகைத் திருவிழாவின்போது பக்தர்கள் பாடும் 'காவடிப் பாட்டை' ஆய்வு நோக்கில் வரையப்பட்டுள்ளது 'அழகனும் ஆடலும்' எனும் ஐந்தாவது கட்டுரை.

தமிழகத்தில் விரும்பி கொண்டாடும் விழாக்களுள் பொங்கல் திருநாள் ஒன்று. இது எவ்வாறு இந்து புராணக் கதைகளுடனும் கிரேக்கப் புராணக் கதைகளுடனும் பொருந்தியுள்ளது என்பதைப் 'பொங்கல் திருநாள்' எனும் ஆய்வுரை விளக்குகிறது.

இந்நூலாசிரியர் தெலுங்கு மொழியில் பயிற்சிகொண்டவர். தமிழ்ப் புலவனான நக்கீரர் தெலுங்கு இலக்கியத்தில் எவ்வாறு சைவக் கவிஞனாக விளங்கினான் என்பதை இந்நூலின் ஏழாவது கட்டுரை விளக்குகின்றது.

திருமால் மீது அன்பு கொண்டு இசைப் பாக்களைப் பாடி இராமனுக்குத் தாசனாக மாறியவர் இராமதாசர்.

அவருடைய இனிமை, எளிமை, பக்தியுணர்வு அமைந்த கீர்த்தனைகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது 'இராமதாசர்' எனும் இறுதிக் கட்டுரை.

ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் அவையை அலங்கரித்த புலவர் எண்மராவர். அதைப் போன்று அப்பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றும் இவர் படைத்த நூலில் அமைந்துள்ள கட்டுரைகளும் எட்டாம். அஷ்டதிக்கஜங்களைப் போன்று எட்டு கட்டுரைகளும் ஒவ்வொரு நிலையில் சீரும் சிறப்பும் பெற்றன. என் அன்பு மாணவரும் இந்நூலாசிரியருமான டாக்டர் கோவி. நரசிம்மன் அவர்கள் இதுபோன்று பல நூல்கள் படைத்துத் தமிழ் இலக்கிய வானில் ஒளிர திருவேங்கடவன் துணை புரிவானாக என வாழ்த்துகின்றேன்.

திருப்பதி. —பொன். சௌரிராசன்

**Prof. H. S. BRAHMANANDA,**
M.A.,(Tel), M.A.,(ling), Ph.D.,
Department of Andhra Bharathi,
Sri Krishnadevaraya University,
Anantapur - 515 003.

# INTRODUCTION

I am happy to introduce another work by Dr. G. Narasimhan, Lectuter in Tamil in our Department to the Tamil Speakers. His earlier work 'Religions in Cilapatikaaram' has already created a place for him in the Tamil literary world. The present work. I hope will broaden the scope of literary persuit, by expanding itself into folklore, comparative study and cultural history of south India. I congratulate Narasimhan garu for his contribution to south Indian studies.

The book contains eight articles on varied topics· through the them remains almost consistently literature The title of the book, is taken from the title of the first paper 'Pattuppaattu Camayangal' (Religions in Pattu-ppaattu).

Pattuppaattu (Ten Idylls or songs) and Ettutogai (Anthology of eight books) constitute the main body of cankam litereature. It is of curious interest to the students of south Indian Culture, that there existed many religious in cankam period like Surya (sun) Chandra (moon), Veda (Aryan), Vaishnava, sakthi and Kaumaram (Kumara cult) which showed an excellent blending of Aryan and Dravidian Culture.

Six places of worship (called Sat sthalaas) have been noted as for as Kumara cult is concerned. 1. Thiruparankuntram 2. Thirucentur 3. Thiruvavinan kudi 4. Swami Malai 5. Kuntru Thoraadal and 6. Pazhamudir Cholai. The author while dealing with the other religious figuring in Pattuppaattu, describes the worship of Indra, Yama. Varuna and Brahma. He also notes that there was the practice of singing ballads while worshipping nadukal' (hero stones) laid in memory of the village men who died heroically for a social cause. Similar parctice of worshipping hero stones is seen in other parts of South India in the name of Virakallu. Jainism and Buddhism have also been noticed in Pattuppaattu, which reveals the religious tolerance of Tamil nadu and the rich cultural heritage of Tamilians

The second article deals with the description of 'Irun-Kuntram' by Ilamperu vazhudiar in his excellency work 'Paripaadal'. The book is in praise of Murugan. Vishnu and the river vaikai (near Madurai) The beauty of nature as dispicted in this poem is Superb and highly philosophical.

The Third article is about the ten avataars of Lord Vishnu as found in Cilapatikaaram. Ilango Adigal describes the avataars in Aaiciyar Kuravai (The special folk song by the cowherd women) This bears partial similarity to Gobbi songs of Telugu country.

The fourth article is a comparative Study of Kamban with Valmiki. Kambar differs from Valmiki in many aspects particularly in the art of description. The author

takes the Ramavataram (the birth of Rama) and high-lights how the divine characters are transformed with human forms in Kamba Ramayana.

The fifth one is article on the folklore of TamlInadu The author takes kruttika fest'val of Tamil country. The festivaloccurs in the month of Adi (Aasaada) every year. and the Tamil folk attach a great significance to this festival. All the Murugan Temples in the Tamil country celebrate this festival. Kavadi paattu (Songs sung while carrying the Kavadi) are famous throughout the country and they creep into the border areas of Chittoor and Kolar Districts of Andhra and Karnataka.

The sixth article describes Pongal otherwise called Sankaranthi, Bhogi is celebrated to commemorate the Gowardhan giri incident of the chiid Sri Krishna. The Makara (Jodaiq sign) symbol related to sankaranti it said to be of 'goat shape' The same symbol of a goas with a fish ending is seen in Greek mythology. The author deals elaborately on these points while discus-sing about sankranthi. He also refers to Lohari festival of punjab and gobbi festival of Telugu country. It is interest to note that Srinatha (15th A.D.), a Telugu poet refers to Sankaranti as 'Penu panduvu' (The big festival) It may be also noted that it is also called 'Peddala Panduga' (The festival of ancestors) in view of the importance of uttaraayana (Ref Bhisma's death in Bharata) Which is said to be the Royal way for salvation

The seventh article deals with Nakkiran, a saiva poet, who is popularly known as Nathkira in Telugu

literature. This article is Comparative Study of Nakkiran from the poems of 'Sri Kalahasti Mahatmyam' by Dhurjati (16th C.A.D.).

The eighth article deals with Ramadas the great composer of devotional songs in Telugu (17th C AD) He was an ardent Vaishnavete devotee of Sri Rama of Bhadrachalam. It is said that the musical saint Thyagaraja (18th C AD) was inspired by the compositions of Ramadas. The last two articles throw a new light on the 'Sundara Telugu' (Subramaniya Bharati Appraisal) as appreciated by a Tamil scholar.

In view of the literary and cultural merits of the book, I commend this work as a good contribution to south Indian studies which is a newly emerging area in our University curriculam.

I wish Dr. G. Narasimhan would contribute similar works to Indian Literature and promote national integration through literary studies.

—H. S. BRAHMANANDA

# வாழ்த்துரை

என் உடன் பிறவா மூத்த சகோதரர் பேராசிரியர் **டாக்டர். பி. எல். ஸ்ரீநிவாச ரெட்டி** எம். ஏ. பிஎச். டி., (தெலுங்குத்துறை ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் பல்கலைக் கழகம் அனந்தபுரம்) அவர்கள் மனமுவந்து அளித்த வாழ்த்துரை.

**Professor. P. L. SREENIVASA REDDY,**
Department of Andhra Bharathi, M.A , Ph.D.,
Sri Krishnadevaraya University,
ANANTAPUR - 515 003 (A.P).

## ఆ కాం క్ష

మిత్రుడు డా. జి నరసింహన్ మా సహాధ్యాపకుడు ఆయన నిరంతర పరిశోధకుడు. ఆయన తొలి గ్రంథం 'శిలప్పది కారంలో మతాలు' అధ్యాపకుడు శుక్లపక్ష చంద్రునిలా భౌద్ధికంగా దినదిన ప్రవర్థమానం కా వ డ ం అశించదగ్గ విషయం దానికి అనుగుణంగా ఆ య న మలి గ్రంథం 'పత్తుపాట్టులో మతాలు' లోనే ఆయన పరిశోధనాసక్తి, పరిశోధనాశక్తి పురివిప్పి నాట్య మడాయి. ఈ గ్రంథం ఎనిమిది వ్యాసాల సంపుటం,

ఆర్యద్రావిడ సంస్కృతులు చెట్టాపట్టా లేసుకొని సాగి పోవడాన్ని కన్నులకు కట్టిస్తుంది పత్తుపాట్టు అనే తొలివ్యాసం

తమిళుల మత సహనానికి గొప్ప సాంస్కృతిక వారసత్వానికి దర్పణంగా నిలిచింది మలివ్యాసం.

మధుర సమీపంలోని వైగైనదీ పరిసర ప్రాంతాల ప్రకృతి సౌందర్యాని మనముందు నిలిపి కనువింపు చేస్తుంది పరిపాడల్ అనే మూడవ వ్యాసం అయిచియార్ కురువై తెలుగు గొబ్బి పాటల్ని తలపిస్తాయి.

ఆర్యద్రావిడ భాషల అవినాభావత్వానికి అద్దం పట్టింది 'కంబవాల్మీకుల తులనాత్మక పరిశీలన' అనే నాలుగో వ్యాసం

తమిళనాట కావడి మోసేటప్పుడు పాడే పాటలు తెలుగునాట చిత్తూరు జిల్లాకు కర్నాటకలోని కోలారు జిల్లాకు వ్యాపించి రాష్ట్రాల సరిహద్దుల్ని భాషా సంస్కృతులు చెరిపి వేస్తున్నాయన్న సూచన చేస్తోంది అయిదో వ్యాసం.

మేషరాశి చిహ్నన్ని పోలిన చిహ్నం గ్రీకు పురాణాల్లో కనిపిస్తూ వుండడాన్ని గ్రహించి చెప్పడం వల్ల ఖండాంతరాల అంతరం మనం అనుకుంటున్నంతగా లేదని చూపడానికి యత్నిస్తోంది ఆరోవ్యాసం తమిళ సంక్రాంతి తెలుగు గొబ్బి పంజాబీలు 'లొహరీ' పండగలు దరిదాపుగా సరిసమానంగా వుంటాయనడం ద్వారా పైపైన చూస్తే వేరువేరుగా భాసించినా లోతుగా పరిశీలిస్తే భారతీయాత్మ ఒక్కటేనని నొక్కి వక్కాణించే ప్రయత్నం చేస్తోంది కూడా.

నక్కీరుని కథను (తమిళం) తెలుగులోని నత్కీరోపాఖ్యానం (శ్రీకాళహస్తీశ్వర మహాత్మ్యం) తో పోల్చి పరిశీలించడం వల్ల ఆంధ్ర భారతి ఋణాన్ని తీర్చుకోవడానికి ఆరంభించి నట్లనిపిస్తుంది (ఎం.ఫిల్ విధ్యార్థుల్ని తెలుగు తమిళాల్లో తులనాత్మక అధ్యయనం చేయించడం ద్వారా ముందే ఆ ఋ ణ ం తీర్చుకున్నారు )

సంగీత కళానిధి అయిన త్యాగరాజును ప్రభావితం చేసిన రామదాసు ఆధ్యాత్మిక సంకీర్తనల్ని పరిశీలించిన ఎనిమిదో వ్యాసం మలి మెటులాగా తోస్తుంది

తమిళం నుంచి తెలుగు తమిళాల తులనాత్మక అధ్యయనం ద్వారా ఆంధ్రభారతికి అ రు దె ం చి న పరిశోధకునికి హార్దికమైన ఆహ్వానం

దాక్షిణాత్య సాహిత్య తులనాత్మక అధ్యయనానికి ఉపకరించే ఈ గ్రంథాన్ని అందించిన డా జి నరసింహన్ బారత బారతికి ఇంకా ఏ న్నె న్నో అమూల్యాలంకారాల్ని సమకూర్చి తద్వారా బారతి జాతీయ సమైక్యతకు దోహదం చేయగలరని విశ్వసిస్తున్నాను.

అనంతపురం P.L. శ్రీనివాసరెడ్డి

ఆచార్య **P.L.** శ్రీనివాసరెడ్డి
ఆంధ్ర బారతి
శ్రీ కృష్ణదేవరాయ విశ్వ విద్యాలయం,
అనంతపురం-515 003

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகம் | : அகநானூறு |
| அகத் | : அகத்திணையியல் |
| இ. ப | : இரண்டாம் பதிப்பு |
| ஏ. ப | : ஏழாம் பதிப்பு |
| ஐங் | : ஐங்குறு நூறு |
| ஐ. ப | : ஐந்தாம் பதிப்பு |
| கழகம் | : திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. |
| குறிஞ்சி | : குறிஞ்சிப்பாட்டு |
| குறு | : குறுந்தொகை |
| சிறுபாண் | : சிறுபாணாற்றுப்படை |
| முருகு | : திருமுருகாற்றுப்படை |
| தொல் | : தொல்காப்பியம் |
| நச். உரை | : நச்சினார்க்கினியர் உரை |
| நூ | : நூற்பா |
| ப. பப | : பக்கம், பக்கங்கள் |
| பட்டின | : பட்டினப்பாலை |
| பதி | : பதிப்பாசிரியர் |
| பதிற்று | : பதிற்றுப்பத்து |
| பரி | : பரிபாடல் |
| பா | : பாடல் |
| புறம் | : புறநானூறு |
| பெரும்பாண் | : பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர் | : பொருநராற்றுப்படை |
| பொருள் | : பொருளதிகாரம் |
| மதுரை | : மதுரைக் காஞ்சி |
| மலைபடு | : மலைபடுகடாம் |
| மு. ப | : முதற்பதிப்பு |
| முல்லை | : முல்லைப்பாட்டு |
| மு. நூ | : முன்னர்க் காட்டிய நூலிலிருந்து |
| மே. வி. க. அ. | : மேற்கோள் விளக்கக் கதை அகர வரிசை |

# பத்துப்பாட்டுச் சமயங்கள்

## *இயற்கைச் சமயம்*

### *ஞாயிறு :*

ஞாயிறு ஒளிக்கடவுள். பிற ஒளிகளையும் தன் ஒளியினால் மறைத்துத் தான் ஒருவனே ஆதி ஒளியாய்த் திகழ்பவன். வானில் கண்போல் நின்று இவ்வுலகமெங்கும் வெம்மையைப் பரப்புபவன். பச்சைப் பயிரினங்களுக்கு உணவும் உயிரும் ஊட்டிக் கருணைக் கடலாக விளங்குபவன். வேதத்தில் ஞாயிறு 'அருணகாடகம்' என வருணிக்கப்படுவதோடு, ''ஸ்வர்ணன், சரண்யுஉஷஸ்'' என்னும் பெயர்களால் சுட்டப்படுகிறது.[1] 'சோதிப்பிழம்பு' என்று சதபத பிரமாணமும், 'எந்தத் தேவன் உலகிருளை நீக்கி ஒளிபெறச் செய்கிறானோ, அவனே நம் புத்தியை ஒளிரச் செய்யட்டும்' என்று காயத்திரி மகா மந்திர மும் கூறுகின்றன.[2]

ஞாயிறு,[3] பரிதி,[4] விரிந்த விடியல்,[5] செல்கதிர்,[6] கதிர் மண்டிலம்,[7] வெவ்வஞ் செல்வன்,[8] வெந்தெறற் கனலி[9] ஆகியன சூரியனைக் குறித்துப் பத்துப்பாட்டு வழங்கும் பெயர்களாகும்.

ஞாயிறு இவ்வுலகில் போற்றுதற்குரிய தெய்வமாகக் தொன்மைக் காலந்தொட்டுவழிபட்டு வருகிறது. இதனாற்றல் முருகபெருமானோடுஒப்பிட்டுக்கூறப்படுகிறது. பேரிருள்சூழ்ந்த இவ்வுலகில் அனைத்துயிரும் உறங்குகின்றன; ஞாயிறு கீழ்த் திசையில் தோன்றியவுடன் அவை விழிப்புற்றுத் தம்வினையில் ஈடுப்படுகின்றன. அதுபோன்று மக்கள் ஆணவ மலைவிருளில் கட்டுண்டு உழலுகின்றபோது அவர்களுக்கு இறைவன் சக அவத்தைகளிலிருந்து விழிப்பூட்டி வீடுபேறு அருளுகிறான். இவ்வாறு முருகப் பெருமான் செயலுக்குச் சூரியனை ஒப்புமை காட்டுகிறார் புலவர் :

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகம் | : அகநானூறு |
| அகத் | : அகத்திணையியல் |
| இ. ப | : இரண்டாம் பதிப்பு |
| ஏ. ப | : ஏழாம் பதிப்பு |
| ஐங் | : ஐங்குறு நூறு |
| ஐ. ப | : ஐந்தாம் பதிப்பு |
| கழகம் | : திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. |
| குறிஞ்சி | : குறிஞ்சிப்பாட்டு |
| குறு | : குறுந்தொகை |
| சிறுபாண் | : சிறுபாணாற்றுப்படை |
| முருகு | : திருமுருகாற்றுப்படை |
| தொல் | : தொல்காப்பியம் |
| நச். உரை | : நச்சினார்க்கினியர் உரை |
| நூ | : நூற்பா |
| ப. பப | : பக்கம், பக்கங்கள் |
| பட்டின | : பட்டினப்பாலை |
| பதி | : பதிப்பாசிரியர் |
| பதிற்று | : பதிற்றுப்பத்து |
| பரி | : பரிபாடல் |
| பா | : பாடல் |
| புறம் | : புறநானூறு |
| பெரும்பாண் | : பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர் | : பொருநராற்றுப்படை |
| பொருள் | : பொருளதிகாரம் |
| மதுரை | : மதுரைக் காஞ்சி |
| மலைபடு | : மலைபடுகடாம் |
| மு. ப | : முதற்பதிப்பு |
| முல்லை | : முல்லைப்பாட்டு |
| மு. நூ | : முன்னர்க் காட்டிய நூலிலிருந்து |
| மே. வி. க. அ. | : மேற்கோள் விளக்கக் கதை அகர வரிசை |

# பத்துப்பாட்டுச் சமயங்கள்

## *இயற்கைச் சமயம்*

### *ஞாயிறு :*

ஞாயிறு ஒளிக்கடவுள். பிற ஒளிகளையும் தன் ஒளியினால் மறைத்துத் தான் ஒருவனே ஆதி ஒளியாய்த் திகழ்பவன். வானில் கண்போல் நின்று இவ்வுலகமெங்கும் வெம்மையைப் பரப்புபவன். பச்சைப் பயிரினங்களுக்கு உணவும் உயிரும் ஊட்டிக் கருணைக் கடலாக விளங்குபவன். வேதத்தில் ஞாயிறு 'அருணகாடகம்' என வருணிக்கப்படுவதோடு, ''ஸ்வர்ணன், சரண்யுஉஷஸ்'' என்னும் பெயர்களால் சுட்டப்படுகிறது.[1] 'சோதிப்பிழம்பு' என்று சதபத பிரமாணமும், 'எந்தத் தேவன் உலகிருளை நீக்கி ஒளிபெறச் செய்கிறானோ, அவனே நம் புத்தியை ஒளிரச் செய்யட்டும்' என்று காயத்திரி மகா மந்திரமும் கூறுகின்றன.[2]

ஞாயிறு,[3] பரிதி,[4] விரிந்த விடியல்,[5] செல்கதிர்,[6] கதிர் மண்டிலம்,[7] வெவ்வஞ் செல்வன்,[8] வெந்தெறற் கனலி[9] ஆகியன சூரியனைக் குறித்துப் பத்துப்பாட்டு வழங்கும் பெயர்களாகும்.

ஞாயிறு இவ்வுலகில் போற்றுதற்குரிய தெய்வமாகத் தொன்மைக் காலந்தொட்டுவழிபட்டு வருகிறது. இதனாற்றல் முருகபெருமானோடுஒப்பிட்டுக்கூறப்படுகிறது. பேரிருள்சூழ்ந்த இவ்வுலகில் அனைத்துயிரும் உறங்குகின்றன; ஞாயிறு கீழ்த் திசையில் தோன்றியவுடன் அவை விழிப்புற்றுத் தம் வினையில் ஈடுப்படுகின்றன. அதுபோன்று மக்கள் ஆணவ மலைவிருளில் கட்டுண்டு உழலுகின்றபோது அவர்களுக்கு இறைவன் சகல அவத்தைகளிலிருந்து விழிப்பூட்டி வீடுபேறு அருளுகிறான். இவ்வாறு முருகப் பெருமான் செயலுக்குச் சூரியனை ஒப்புமை காட்டுகிறார் புலவர் :

''உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விலங் களிரொளி''[10]

இவ்வடிகளுள் 'ஞாயிறு' என்பதற்குப் 'பலர்புகழ்' எனும் அடை வந்துள்ளது. இதற்கு நச்சினார்க்கினியர், ''எல்லாச் சமயத்தாரும் புகழும் ஞாயிற்றை'' எனப் பொருளுரைப்பர்.[11] 'பலர்புகழ்' என்பதால் பொதுவாக எல்லா நாடுகளிலும் ஞாயிறு வழிபாடு இருந்ததாகக் கொள்ளலாம். காட்டாக, ஐரோப்பா, தென் அமெரிக்கா, சீனா முதலிய நாடுகளில் சூரியனின் சிதைந்த கோயில்கள் இன்று காணப்படுவதைக் கூறலாம். எகிப்தில் சூரியனை 'ரா' (Ra) அல்லது 'ஆதன்' (Aton) என்ற பெயரிலும், கிரேக்கத்தில் 'அப்பாலோ' (Appalo) என்ற பெயரிலும் வணங்கியுள்ளனர்.

## ஞாயிறு - தோற்றம்

ஞாயிறு தேன்கூடு போன்ற தோற்றத்தை உடையது.[12] அதனைச் சுற்றி ஒன்பது கோள்கள் ஒளியுடன் விளங்குகின்றன.[13] ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் அது புறப்பட்டுச் சென்று உலகிற்கு ஒளியூட்டும்.[14] அது காலையில் தோன்றிப் பகலில் ஒளிவீசி, மாலைப் பொழுதில் அத்தகிரியில் சென்று மறையும்.[15]

## ஞாயிறு - தலைமை

ஞாயிற்றின் தலைமையியல்பு வெளிப்படையாகக் கூறப் பெறாமல் கரிகாற் பெருவளத்தானின் அளியுடனும் தெறலுடனும் ஒப்பிட்டுக் குறிப்பாக விளக்கப்பட்டுள்ளது. கரிகாலன் தாயின் வயிற்றிலிருந்து பிறக்கும்போதே அரசுரிமை பெற்றுப் பிறந்தான். பின்னர்த் தன் ஏவல் கேட்போரது நாடுகளைக் காத்தும், பகைவர்தேயங்களை அழித்தும் விளங்கினான். அது போன்று ஞாயிறு கடலிடத்துத் தோன்றி தன்கதிர்க்கைகளால் இவ்வுலகைக் காத்தும், காய்ந்தும் விளங்குகின்றது.[16] ஞாயிறு

கடலிலே தோன்றியவுடன் கடற்பரப்பிலே தன் கதிரைப் பரப்பிப் பின்னர் மெல்ல விண்ணிலேறி உலகினைத் தன் ஒளியுள் அகப்படுத்திக் கொண்டாற்போலத் தவழக் கற்ற காலந்தொட்டுச் சிறந்த நாடுகளைத் தன் வலியுள் அடிப்படுத்திக்கொண்டான் கரிகாலன்.

## ஞாயிறு - ஆற்றல் தன்மை

ஞாயிறு விண்ணில் வேகமாகச் செல்லும் இயல்புடையது. 'ஞாயிறு விண்ணில் செல்லும்போது வெண்ணிறப் புரவிகள் பறந்து செல்வதுபோல் உள்ளது. அதனைப் பிடிக்க அன்னச் சேவல்கள் மேல் நோக்கிப் பறந்து செல்கின்றன' என்று ஞாயிற்றின் ஆற்றலைக் கூறுகிறார் மாங்குடி மருதனார்.[17]

## ஞாயிறு - அஞ்ஞானம் நீக்கும் இயல்பு

ஞாயிறு தோன்றுமுன் உலகம் இருளில் மூழ்கிக் கிடந்தது. நன்னன் தோன்றுமுன் மக்கள் பேரிடர் உற்று அல்லலுற்றனர் ஞாயிறு தோன்றி ஒளியூட்டி மக்களைத் தத்தம் தொழிலில் ஈடுபடச் செய்கிறது. அதுபோன்று நன்னன் தோன்றிப் பகைவரை ஒறுத்து மக்களின் அச்சந்தீர்த்துத் தனது அருளாலே நன்னெறிக்கண் செலுத்தினான். மேலும் வறுமைப்பேரிருளில் மூழ்கிக் கிடந்த உலகினை வண்மைப் பேரொளி வழங்கி இடர்தீர்த்து இன்புறுத்தினான் என இருவகைப் பொருள் கூறி உவமிக்கப்பட்டுள்ளது.[18] ஞாயிற்றின் பெருமையை,

> ''அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
> பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி''[19]

என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.

ஞாயிறு குறித்துச் செய்திகள் பத்துப்பாட்டில் காணப் படுகின்றன. இவை ஞாயிற்றை இறைபொருள் என்ற

நிலையில் இல்லாது பொதுவாகப் படைத்துக் கூறுகின்றன. பிற்காலத்தில் ஞாயிறு வழிபாடு தோன்ற இவையே அடிப் படையாக இருந்தன எனலாம்.

## திங்கள் :

திங்கள்,[20] மதி,[21] செல்வன்,[22] நிலவு,[23] பிறை,[24] நிலா[25] ஆகியன திங்களையும் அதன் ஒளியையும் குறிக்கும் சொற்களாகும்.

## திங்கள் - தோற்றம்

திங்கள் விண்மீன் புடைசூழ அமைந்துள்ளது.[26] விண்மீன் கள் திங்களின் தண்ணளியையும் தெறலையும் பெறுவதால் நீங்காமல் இருக்கும். இது தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பகைநாட்டினின்று கொணர்ந்த பொருள்களைப் பெறுவதால் சுற்றத்தினர் நீங்காமல் இருத்தலுக்கு ஒப்ப மதிக்கத்தக்கது[27] எனமதுரைக் காஞ்சி கூறுகிது.

## திங்கள் - இயல்பு

திங்கள் பெரிய வெள்ளிகலம் போன்ற அமைப்புடையது[28] ஞாயிற்றுடன் வலம்வரும் இயல்புடையது. மதுரைக்காஞ்சி திங்களை 'இரவு செய்யும் வெண்டிங்கள்'[29] என்கிறது. திங்கள் தண்ணிய ஒளியை நல்கி உயிரினங்களைத் தெளிவு பெறச் செய்கிறது. இப்பண்பு முருகப் பெருமான் முகத்தோடு ஒப்பிட்டுக் கூறப்பெற்றுள்ளது. திங்களுக்குப் பல பெயர்கள் உண்டு. அவற்றுள் மதி என்பது ஒன்றாகும். மதி என்றால் அறிவு என்றும் பொருள் உண்டு. முருகனின் ஒருமுகம் திங்களைப் போன்றது. வேதங்கள், நூல்கள் முதலியவற்றில் உணர்த்தப்பெறாத சிறந்த கருத்துகளை உணர்த்தி உயிர்-களைத் தெளிவடையச் செய்வதால் திங்களோடு முருகனது ஒருமுகம் ஒப்பிடப் படுகிறது.[30]

## திங்கள் - தலைமை

மேற்றிசையில் தோன்றும் திங்கள் பாண்டியகுல முதல்வ னாவான். திங்களைப் பண்டுதொட்டு மக்கள் வணங்கினர். இது 'தொன்று தெழுபிறை'[31] எனும் தொடரால் அறியப் பெறுகிறது. திங்களின் தலைமைத்திறம் நெடுஞ்செழியன் செயலுடன் ஒப்பிடப்பட்டுள்ளது. திங்களுக்கு இரு பகுதிகள் உண்டு. ஒன்று ஒளிப்பகுதி' மற்றொன்று இருள்பகுதி. ஒளிப் பகுதியைப் 'பிறை' எனவும், இருட்பகுதியை 'மதி' எனவும் வழங்குவர். நெடுஞ்செழியனின் உயிர்நூல்களிற் கூறப்பெற்ற அரசியல் நெறி பிறழாது செங்கோன்மை செலுத்தும் ஆற்றல் பிறையை ஒக்கும் எனவும், அவன் வளர்ச்சியினால் பகைவர் ஆற்றல் கெடுவது மதியை ஒக்கும் எனவும் மதுரைக்காஞ்சி கூறுகிறது.[32] திங்கள் உரோகிணியுடன் சேர்ந்திருத்தல் கணவன் மனைவி உறவிற்குக் காட்டாகக் கொள்ளப்பட்டது[33]

## திங்கள் - புராணக் கதைகள்

சந்திரனைக் குறித்து இருபுராணக் கதைகள் இடம் பெற்றுள்ளன.

## செல்வனொடு நிலைஇய உரோகிணி

தக்கனுக்கு இருபத்தெழு பெண்கள் இருந்தனர். அவன் தம் மக்களைச் சந்திரனுக்கு மணமுடித்து வைத்தான். சந்திரன் தன் மனைவியர் அனைவரிடமும் ஒருமித்து ஆசை வைக்காமல் உரோகிணி, கார்த்திகை ஆகிய இருவரிடம் மட்டும் அளவுகடந்த அன்பு கொண்டிருந்தான். அதனால் வெறுப்புற்ற உடன் பிறந்த மற்றவர்கள் தன் தந்தையிடம் கூறி வருந்தினர். இதனைக் கேட்ட தக்கன், 'நாடோறும் ஒரு கலை தேய்க' எனச் சாபமிட்டான். சந்திரனின் கலை நாடோறும் தேய்ந்துகொண்டே வந்தது. பின்னர் சிவனை வழிப்பட்டு இழந்த கலைகளை மீண்டும்பெற்றான் சந்திரன்.[34] இக்கதைக் குறிப்பு.

''விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலன் மண்டிலத்து
முரண்மிகு சிறப்பிற் செல்வனொடு நிலைஇய
வுரோகிணி நினைவன ணோக்கி''[35]
என்னும் அடிகளால் உணர்த்தப்படுகிறது.

## மதிசேரரவு

இராகு கிரகபதம் அடைந்தவர்களுள் ஒருவன். தந்தை, விப்ரசித்தி; தாய் சிம்மிகை; தம்பி கேது. இராகு, கேது ஆகிய இருவரும் கச்சியபருக்குப் பேரன்கள். திருமால் சகன்மோகினி உருக்கொண்டு தேவர்களுக்கு அமுது பகிர்ந்தளித்த போது இராகு தேவவுருக் கொண்டு சூரியன் சந்திரன் ஆகிய இருவருக்கும் இடையின் நின்று அமுது பெற்று உண்டான். இவ்விருவரும் இராகுவைக் குறிப்பால் திருமாலுக்கு உணர்த்தினர். மோகினி உருக்கொண்டதிருமால் இராகுவைத் தலையில் சட்டுவத்தால் அடித்தார். பிரிந்த கை இராகு என்றும், மற்ற உடல் கேது என்றும் பெயர்பெற்றுச் சூரிய சந்திரர் தங்களை குறிப்பித்தக் காரணத்தால் அவர்கள்மேல் பகைகொண்டனர். இவர்கள்தவத்தால்கிரகபதம்அடைந்தபின் திருமாலை வழிபட்டு, கரும்பாம்பு, செம்பாம்பு, வடிவெய்தினர். அவ்வப்போது சந்திரனைப் பற்றி துன்புறுத்தி வந்தனர்.[36] இக்கதைக் குறிப்பு,

''மதிசேர ரவின் மானத் தோன்றும்''[37]
என்றும்,

''..........................சிறுகோட்டுக்
குழவித் திங்கட் கோணேர்ந் தாங்கு''[38]
என்றும் வருகின்றது.

இவ்வாறு சந்திரனைக் குறித்துச் செய்திகள் அமைந்துள்ளன.

*வேதம் :*

'வித்' என்னும் வடமொழிச் சொல்லடியிலிருந்து தோன்றியது 'வேதம்.' 'வித்' என்பதற்கு 'அறிதல்' என்று பொருள். எனவே, வேதம் என்ற சொல்லிற்கு அறிவுநூல் என்பது பொருளாகும்,[39]

வேதங்கள் மனிதர் எவராலும் ஆக்கப்படாமல் தாமாகத் தோன்றியவை, ஆகவே இவற்றிற்கு 'அபௌர்ஷேயம்' என்ற பெயரும் உண்டு.

வேதம் நான்கு வகைப்படும். பனம்பாரனார், ''நான் மறை முற்றிய வதங்கோட் டாசான்''[40] என்றுதொல்காப்பியப் பாயிரப் பகுதியில் கூறுவதனால் இதனைத் தெளியலாம்.

பத்துப்பாட்டில் வேதம்,[41] மறை[42] ஆகியன வேதத்தைக் குறிக்க வந்துள்ளன. பொதுவாக, வேதம் நான்கெனினும், ''சிறந்த வேதம் விளங்கப் பாடி''[43] என்று மதுரைக்காஞ்சி உரைப்பதால், ரிக், யசுர், சாமம் ஆகிய மூன்றைச்சிறந்த வேதங்களாகவும், அதர்வண வேதத்தைச் சாதாரண வேத மாகவும் கொண்டனர் எனக்கருதலாம். அதர்வண வேதம் மக்களுக்கு உகந்த ஒழுக்கங்களைக் கூறாது தீவினை பயக்கின்ற மந்திரங்களைக் கூறுவதால் அது தனித்து வைத்து எண்ணப்பெறுகிறது.

> ''அதர்வ வேதம் ஒழுக்கங் கூறாது பெரும்பான்மையும்
> உயிர்கட்கு ஆக்கமேயன்றிக் கேடு சூழும் மந்திரங்களும்
> பயிறலின் அவற்றோடு கூறப்படாது''[44]

என்னும் நச்சினார்க்கினியரின் உரைப்பகுதி இதற்கு அரண் செய்வதாக அமைகிறது.

வேதங்கள் மந்திரம், பிரமானம், உபநிடதம் ஆரணியகம் என நான்கு பகுதிகளைக் கொண்டுள்ளன. மந்திரம் என்ற சொல்லுக்கு 'உச்சரிப்பவரைக் காப்பாற்றுவது' என்பது

கருத்து. ''மந்திர விதியின் மரபுளி வழாஅ''[45] என்னும் திருமுருகாற்றுப்படைத் தொடருக்கு, ''மந்திரத்தையுடைய வேதத்திற் கூறிய முறையிடத்துத் தப்பாத'' எனப் பொருள் உரைப்பதால் அத்தொடரில் வருகின்ற மந்திரப்பகுதி வேதத்தின் ஒரு பகுதியே எனலாம்.

பண்டைக் காலத்தில் வேதங்களைச் சிலர் பொருள் தெரிந்தும் பொருள் தெரியாமலும் உச்சரித்தனர். பொருள் விளங்கச் சொல்லுதலைப் 'பாடி' என்னும் சொல்லால் குறித்துள்ளனர். இதனை,

''சிறந்த வேதம் விளங்கப் பாடி''[46]
''கோத லந்தணர் வேதம் பாட''[47]

என வரும் அடிகள் உணர்த்தும்.

## *வைணவம்*

''மாயோன் மேயகாடுறை உலகமும்''[48]

என்று தொல்காப்பியர் முல்லைநிலக் கடவுளாகத் திருமாலைக் குறிக்கின்றார். சங்க இலக்கியத்தில் மால், மாயோன் எனும் பெயர்கள் வழக்கிலிருந்தன, மால் என்பதற்குப் 'பெரியோன்' எனவும், மாயோன் என்பதற்குக் 'கருமை நிறமுடையவன்' எனவும், பொருள் கொள்ளலாம்.

முல்லைப் பாட்டில் (அடி 3) 'மால் என்ற சொல்லும், மதுரைக்காஞ்சியில் (அடி 590) 'மாயோன்' என்னும் சொல்லும் வருகின்றன. பிற இடங்களில் இப்பெயர் காணப்பெறவில்லை. எனினும் கூறப்பெறும் பண்புகளைக் கொண்டு திருமால் என உய்த்துணர முடிகிறது. காட்டாக, 'நெடியோன்'[49] என்ற சொல் திருமால் வாமனனாக அவதரித்து நெடியோனாக வளர்ந்ததையும், 'முந்நீர் வண்ணன்'[50] என்ற தொடர் கடல்போன்ற கருநிறங்கொண்ட தன்மையையும், 'பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்'[51] என்பது

பாம்பின் மீது துயில்கொண்ட இயல்பையும், 'புள்ளணி நீள்கொடிச் செல்வன்'[52] என்பது திருமால் கருடக்கொடியை உடையவன் என்பதையும் தெரிவிக்கின்றன.

திருமால் வாடாத பூவினையும், இமையாத கண்ணினையும் உடையவன். 'பெரியோன்' என்றபெயரும்அவனுக்கு உண்டு[53] திருமாலைத் தலைவனாகக் கொண்டு விளங்கும் சமயம் வைணவமாகும். இது, தத்துவம், சமயம் என இரண்டாகப் பிரித்து ஆராயப்பெறுகிறது.

## தத்துவம்

திருமால் தூலமாய் நிற்கும் காரியப் பொருளாகவும், சூக்குமமாய் நிற்கும் காரணப் பொருளாகவும், திகழ்கிறான். இதற்குச் சான்றாக வாமன அவதாரத்தைக் கூறலாம்.

''நிலந்தரு திருவின் நெடியோன் போல''[54]
''நீணிற புருவின் நெடியோன் கொப்பூழ்''[55]
''இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்''[56]
''நீர்செல நிமிர்ந்த மால்''[57]

திருமால் இவ்வுலகத் தோற்றத்திற்கு நிமித்த காரணமாகவும் விளங்குகிறான்.[58]

## முத்தொழில்

திருமாலுக்குப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்கள் உண்டு. பத்துப்பாட்டில் மூன்று தொழில்களும் இடம் பெறுகின்றன. திருமால் தன் உந்தித் தாமரையில் பிரம்மனைத் தோற்றுவித்து அவன் மூலம் இவ்வுலகமும் இவ்வுலகப் பொருள்களும் தோன்றச் செய்தான். இவ்வுலக ஆக்கத்திற்கு மூலக் காரணம் திருமால்.

இதை,

''நீனிற வுருவி னெடியோன் கொப்பூழ்
நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றி''[59]

எனும் அடிகள் உணர்த்தும். ''அருந்திறற் கடவுள் வாழ்த்தி''[60] எனும் தொடரில் திருமாலின் முப்பண்புகளும் புலப்படுகின்றன. இறைவன் திருவெஃகாவில் அறிதுயிலின் கண் கிடந்த வண்ணமே ஆக்கல், அளித்தல், அழித்தல் தொழிலைச் செய்கிறான். இரணியன், இராவணன் முதலோரை அழித்ததனாலும், கடலிலிருந்து உலகினைக் கோட்டால் உயர்த்ததனாலும் 'அருந்திறற் கடவுள்' என் விளக்கப்பெற்றுள்ளது.

## நிலைகள்

திருமால் தத்துவ் நோக்கில் ஐந்து நிலைகளில் வைத்து எண்ணப் பெறுகிறான். அவ்ற்றுள் நான்கு நிலை குறித்துப் பத்துப்பாட்டில் குறிப்புகள் வருகின்றன.

## பரத்துவ நிலை

இறைவன் அகத்தானும் புறத்தானும் பற்று நீங்கப் பெற்று நித்திய சூரிகள் புடைசூழ வாடாத் பூவினையும் இமையாத கண்ணினையும் உடையவனாய் விளங்கும் நிலை இதுவாகும்.

''மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப் பூவி னிமையா நாட்டத்து
நாற்ற வுணவி னுருகெழு பெரியோர்க்கு''[61]

என்னும் அடிகள் இதனை உணர்த்தும்.

## வியூக நிலை

இஃது ஆயிரம் தலையையுடைய ஆதிசேடன்மீது மால் பள்ளி கொண்டிருக்கும் நிலையாகும். இந்நிலை பற்றிக்,

''காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னாங்கண்''[62]

என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது. நீண்ட பூங்கொத்துக்களையுடைய காந்தள் அடர்ந்த அழகிய மலையிலே யானை படுத்துக் கிடப்பது போன்று திருவெஃகாவில் ஆயிரந் தலையையுடைய ஆதிசேடன் மீது திருமால் படுத்திருக்கிறான்

*விபவ நிலை*

இஃது அவதார நிலையைக் குறிக்கும்.

'' றைவன் தனது விண்ணுலகிலிருந்து மண்ணுலகில்
தோன்றி
வடிவு கொள்ளும் நிலையே அவதாரம் அல்லது விபவம் எனப்படுகிறது. அவதாரம் என்பது இறைவன் இயலுலகிற்கு இறங்கிவர எடுத்துக் கொள்ளும் வடிவத்தைக் குறிக்கும்''[63]

என்பர். இவ்வவதாரச் செயலினால் நல்லோரைக் காத்து அல்லோரை அழித்துத் தருமத்தை நிலைநாட்டுகிறான் இறைவன். கண்ணன்,

''பரித்ராணாய ஸாதூ னாம் வினாசாய துஷ்க்கிருதாம்
தர்மஸமஸ்த் தாபனார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே''[64]

என்று கீதையில் அருளுகிறான்.

திருமால் எடுத்த பத்து அவதாரங்களுள் வாமனாவதாரம் பற்றிப் பத்துப்பாட்டில் கூறப்பெற்றுள்ளது. காசிபருக்கு மகனாகப் பிறந்த வாமன் மாபலிச் சக்கரவர்த்தியின் பேராசை கொடுமையிலிருந்து தம் அடியார்களான தேவர்களைக் காக்க மாவலியிடம் மூவடி மண்பெற்று இவ்வுலகை ஆட்கொண்டார்.

''நிலந்தரு திருவி னெடியோன்''[65]
''நீனிற வுருவின் நெடியோன்''[66]

''இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன்''[67]
''நீர்செல நிமிர்ந்த மாஅல் போல''[68]

எனவரும் அடிகளில் வாமன அவதாரம் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

## அர்ச்சை நிலை

இது வழிபடுவதற்குரிய வடிவம் ஆகும். அழிபடும் அன்பர்கட்கு எளிவந்து அருள்செய்வதன் பொருட்டுத் திருக் கோயில்களிலும் இல்லங்களிலும் அவர்களின் விருப்பத்திற் கிசைந்த வடிவில் எழுந்தருளச் செய்துள்ள வடிவங்களில் இறைவன் தங்கியிருப்பது அர்ச்சை நிலையாகும். காட்டாக,

''....................பூமலி பெருந்துறைச்
செவ்வி கொள் பவரோ டசைஇ யவ்வயி
னருந்திறற் கடவுள் வாழ்த்தி''[69]

எனவரும் தொடரால் கச்சியில் வதியும் பாம்பணையின்மீது பள்ளிக்கொண்டுள்ள திருமால் குறிக்கப்படுகிறான்.

## சமயம்

## கொடி, ஊர்தி

திருமால் கருடபகவானை ஊர்தியாக உடையவன். அவ்வுருவம் பொறித்த கொடியை உடையவன். பத்துப் பாட்டில் திருமால் ஊர்தியான கருடனைப் பற்றிய குறிப்பு வருகின்றது. ''நஞ்சோடே உறைக்குள் கிடந்த துளையினை யுடைய வெள்ளிய பல்லையுடையவனும், தீக்கால்வது போன்று நெட்டுயிர்ப்புக் கொள்ளவும், கண்டார்க்கு அச்சம் தோற்றுவிப்பவனுமாகிய கொடிய வலியினை உடைய பாம்புகள் மருளும்படி அடிக்கும், பல வரிகளை உடைய வளைந்த சிறகுகளுடைய கருடனை அணிந்த நெடிய கொடியினை உடையவன்''[70] எனக் கூறப்பட்டுள்ளது.

*விழா*

திருமாலுக்கு விழா எடுத்தனர். அஃது ஓண நன்னாளில் நிகழ்ந்துள்ளது. திருமால் உலகில் பிறந்து இடையூறு விளைவிக்கும் அவுணர்களைக் கொன்று அறங்காத்தான். அந்த நாளை ஓண நன்னாள் என்பர். அந்த நாளில் யானைப் போர் மதுரையில் நடந்துள்ளது.[71]

## வைணவத் திருத்தலங்கள்

பத்துப்பாட்டில் மாமல்லபுரம், திருவெஃகா முதலிய திருத்தலங்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

*மாமல்லபுரம்*

இது நீர்பெயற்றுறை என அழைக்கப்பட்டது. நீர்பெயற்று என்பது நீர்பாயற்றுறை என்பதன் மரூஉ மொழியாகும். இதனைக் கடன்மல்லைத் தலசயனம் என வைணவர் வழங்குவர். தலசயனம் என்பது சலசயனம் என்று மறுவிற் றென்பர். எனவே, நீர்ப்பாயல் என்பதன் நேர்ப்பொருளாகச் 'சலசயனம்' அமைந்துள்ளது. மல்லை, மாமல்லை, மாவலி புரம், மகாபலிபுரம் என இத்திருப்பதியின் பெயர் படிப்படியே மருவி இக்காலத்தில் 'மகாபலிபுரம்' என வழங்கப்பெறுகிறது.

*திருவெஃகா*

திருவெஃகா, திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகளில் ஒன்று. இது கச்சிப் பதியிலுள்ளது. இங்கே திருமால் சேஷயத் திருக்கோலமுடையவராக எழுந்தருளியிருக்கின்றார்.

## புராணக் கதைகள்

பத்துப்பாட்டில் திருமால் குறித்து ஒரே ஒரு புராணக் கதை இடம்பெற்றுள்ளது.

## நீர்செல நிமிர்ந்த மால்

இது திருமால் அவதாரங்களுள் ஒன்றாகும். திருமால் வாமனப் பெயர்பெற்றுக் காசிபருடைய மகனாகத் தோன்றினார். இவர் மிகக்குறுகிய வடிவம் உடையவர். பெருமையிற் சிறந்த இவருக்குக் 'குறளன்' என்ற பெயரும் உண்டு.

மாவலி என்பவன் ஆட்சி செய்தான். அவனால் தேவர்கட்கும் மனிதர்கட்கும் அல்லல்கள் பல உண்டாயின. இவ் வாமனருடைய பெருமையை உணர்ந்தோர் இவர்பால் சென்று 'மாவலி செய்யும் கொடுமையிலிருந்து தம்மைக் காத்தருள் புரிய வேண்டும்' என வேண்டினர். அவர்கள் வேண்டுகோளுக்கு ஏற்ப வாமனர் மாவலிடாற் சென்று 'நான் யாகம் செய்ய மூன்றடி மண் வேண்டும்' எனக் கேட்டார். அதைக் கேட்ட மாவலி தருக்கி, 'மூன்றடி மண்தானே பெற்றுக்கொள்' எனக் கூறித் தன் ஆசாரியன் சொல்லை மீறித் தாரை வார்த்துக் கொடுத்தான். உடனே வாமனர் வானளாவ உயர்ந்து மண்ணில் ஓரடியையும் விண்ணில் ஓரடியையும் வைத்தார். மூன்றாவது அடியை எங்கே வைப்பது என்று மாவலியிடம் கேட்க, மாவலி தன் தலையைக் காட்டினான். வாமனன் தலையில் அடியை வைத்து அழுத்தினார்.[72] இக் கதைக்குறிப்பு, பத்துப்பாட்டில் நான்கு இடங்களில் வருகிறது.[73]

## திருமகள்

திருமாலின் மனைவி திருமகள் ஆவள். இவளுக்குப் பெரிய பிராட்டி, ஸ்ரீ, இலக்குமி, திரு முதலிய பெயர்களுள. பத்துப்பாட்டில் திருமகள் 'திரு' என்று வழங்கப்படுகிறாள். செல்வத்தைக் குறிக்கவும் அதே சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. முல்லைப்பாட்டில் திருமகளை 'மா' என்று குறிப்பிடுகிறார் புலவர்.

அழகாகக் கட்டப்பட்ட வீடுகளில் திருவின் உருவம் தீட்டப்பெற்று இருந்தது.[74] வாயில் நிலைகளில் திருமகளின் உருவம் தீட்டப்பட்டிருக்கும். காட்டாக, அரசனது அரண்மனை வாயிலைப் பற்றி நெடுநல்வாடையில் கூறும்போது இருபக்கமும் மலரேந்திய இரு யானைகள் நிற்க, இடைய திருமகள் வீற்றிருப்பது போன்ற உருவம் செதுக்கப்பட்டு இருந்ததை நக்கீரர் கூறுகிறார்.[75] மேலும் நகரத்தின் காவல் தெய்வமாகவும்,[76] அங்காடி வீதியில் வீற்றிருக்கும் தெய்வமாகவும் இலக்குமி விளங்குகிறாள்.[77] மண்ணையும் விண்ணையும் தம் திருவடியில் அளந்துகொண்ட மாலின் மார்பில் மறுவாகவும்,[78] போர்த்தொழில் மிக்கு நடத்தும் நன்னன் மார்பில் இனிது உடைப்பவளாகவும்[79] அவள் இருக்கிறாள். அவள் இருப்பிடம் தாமரை மலராகும்.[80] பண்டைக்கால மதிற்கதவுகளில் திருமகளின் உருவம் செதுக்கப்பட்டிருந்தது.[81]

## *சைவம்*

### *சிவன்*

சைவசமயக் கடவுள் சிவன் ஆவன். தொல்காப்பியத்தில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் நிலங்களுக்கு முறையே மாயோன், சேயோன், வேந்தன், வருணன் தெய்வங்களாகக் குறிக்கப்பட்டனர். சிவன் நிலத்தெய்வமாகக் கருதப்பெற வில்லை.

பத்துப்பாட்டில் சிவனுக்கு ஆல்கெழு கடவுள்,[82] ஆலமர் செல்வன்,[83] காரியுண்டிக் கடவுள்,[84] தொன்முது கடவுள்,[85] மழுவாள் நெடியோன்,[86] முரண்மிகு செல்வன்[87] என்ற பெயர் கள் வழங்கப் பெற்றுள்ளன. பத்துப்பாட்டில் சிவனைப்பற்றிய குறிப்புகள் வரினும் சிவன் எனச் சைவ சமய இறைவன் குறிக்கப்பெறவில்லை.

சிவபெருமான் ஆனேறு பொறித்த உருவக் கொடியை வலப்பக்கத்தே உயர்த்தியும், பலர்புகழ் திண்ணியதோள்களை உடையவனாகவும், உமையை ஒரு பாகத்தே உடையவனாகவும் விளங்குகிறான்.[88] இறைவனுக்கு ஊர்தியும் கொடியும் வெள்ளேறு என்பதைப் புறநானூறு உணர்த்துகிறது.[89] இறைவனுடைய திருவருளே இறைவி ஆவள். அவ்வருள் அவனின்று வேறாகாமல் இருக்கத் தன்னொரு கூறிலே இறைவியை கொண்டனன்.

## தத்துவம்

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் சிவனின் தொழிலாகச் சைவ சமயிகள் கருதுவர். இத்தொழில்கள் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களிலிருந்து உயிர்களை விடுவித்து, அவற்றிற்கு வீடுபேறு நல்கக் கருதியே ஆகும். ''ஐந்துடனியற்றிய மழுவாள் நெடியோன்''[90] என்பதால் இவ்வுண்மை பெறப்படுகிறது. மழு என்பது இறைவனது ஆயுதம். இறைவனுக்குத் துடி முதலிய பொருள்கள் பல இருப்பினும் 'மழு' மட்டுமே மும்மலங்களை அறுக்கும் ஆற்றல் வாய்ந்ததாகும். அதனால் தான் 'மழுவாள் நெடியோன்' என்று கூறப்பட்டுள்ளது.

நிலனும் நீரும் தீயும் காற்றும் விசும்பும் ஆகிய ஐம்பூதங்களையும் படைக்கும் இயல்புடையவன் சிவன். உலகத்தின் தோற்றமுறை பற்றிக் கூறும்போது விசும்பு, வளி, தீ, நீர், நிலன் என்றும், ஒழுக்கமுறை பற்றிக் கூறும்போது நீர், நிலன், தீ, வளி, விசும்பு என்றும் கூறுதல் வேண்டும். ஆனால் ஈண்டு நீரும் நிலனும் என முறை பிறழ வந்துள்ளது. இதற்குக் காரணம் சைவ சமயத்தினர் நீரிலிருந்துதான் பிற பூதங்கள் தோன்றின என்று கருதியது ஆகும்.[91]

## சமயம்

சங்க காலத்தில் சிவனுக்கு விழா எடுக்கப்பட்டது.[92]

திருவிழாவின் தொடக்கத்தில் பறையறைந்து தெரிவிக்கப்பட்டது.[93] கோவில் விழாவில் ஏழாம்நாள் சிறந்தது. ஏழாம்நாள் அந்தியில் கடவுள் தீர்த்தமாடுதல் மரபாகக் கருதப்பட்டது. அது மதுரையில் சிறப்புற்று விளங்கியது.[94]

## திருத்தலங்கள்

### மதுரை

மதுரையில் சிவபெருமானுக்குக் கோயில் இருந்தது; விழா எடுத்து மகிழ்ந்தனர் மக்கள்.

### நவிரமலை

இம்மலை 'திரிசூலகிரி', 'பருவத மலை' என வழங்கப் படுகிறது. ஆண்டு உறையும் கடவுள் காளகண்டேசுவரராவார். இக்கடவுளைக் 'கடல்சூழ்ந்த இவ்வுலகம் நடுங்குமாறு அச்சத்தைத் தோற்றுவித்த கடிய வலியையுடைய நஞ்சு உண்டு, பெரிய புகழை உடையவன்'[95] என்று மலைபடுகடாம் போற்றுகிறது. இது திருவண்ணாமலைக்கு வடமேற்கில் உள்ளது.

விறலியர் மலைவாழ் தெய்வங்களைப் பணிந்து குறிஞ்சிப் பண்ணில் பல பாக்களைப் பாடினர். அவர்கள் முதலில் கடவுளை வாழ்த்திய பின்னரே பிற பாக்களைப் பாடினர்.[96] நவிரமலை மீது காரியுண்டிக் கடவுள் கோயில் இருந்தது. கூத்தர்கள் அக்கடவுளை வணங்கிச் சென்றனர்.[97] ''கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன''[98] என்று சிறுபாணாற்றுப்படை சிபபெருமானைக் குறிக்கிறது. எனவே, பண்டைக் காலத்தில் சிவனுக்கு மலைமீது கோயில் இருந்தமை புலப்படுகிறது.

*புராணக் கதைகள்*

## *ஆல்கெழு கடவுள்*

சனகர் முதலான முனிவர்கள் நால்வருக்குச் சிவன் கல்லால பரநிழலின்கண் இருந்து உபதேசித்தான். அதனால் அவனுக்குத் தக்கிணாமூர்த்தி என்ற பெயர் உண்டு.[99]

## *தொன்முது கடவுள்*

இறைவன் ஒரு காலத்தே பாண்டிய மன்னன் மகளாகிய அங்கயற்கண்ணியை மணந்து பாண்டியற்குரிய அரசுகட்டிலின் மீதமர்ந்து தென்னாட்டை ஆட்சி செய்தார். இதனை மாங்குடி மருதனார்,

''தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்
றொன்முது கடவுட் பின்னர் மேய''[100]

என்றார். இதனால் தொன்முது கடவுள் என்னும் பெயர் வந்தது.

## *ஆலமர் செல்வன்*

ஆய் என்னும் வள்ளலுக்கு நீலநாகம் ஒரு கலிங்கத்தைக் கொடுத்தது. அதனை அவன் சிவபெருமானுக்குக் கொடுத்தான்.[101] அதில் சிவபெருமான் ஆலமர் செல்வன் என்னும் பெயரில் குறிக்கப்பட்டுள்ளான்.

## *மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வன்*

''தாரகன் மக்களாகிய தாரகாக்கன், கமலாக்கன், வித்துன் மாலினி எனும் மூவரும் மூன்று கோடியாண்டுகள் தவமியற்றினார்கள். நான்முகனால் பொன், வெள்ளி, இரும்புகளினால் ஆகிய மூன்று மதில்களைப் பெற்றார்கள். இவை

முறையே விண்ணுலகம், மண்ணுலகம், கீழுலகம் எனும் இடங்களில் நிலைப்பெற்றிருந்தன; வேண்டும் இடங்களுக்கு உடன்செல்லும் இயல்புடையன. அவை ஆயிரம் ஆண்டுகட்கு ஒருமுறை மூன்றே முக்கால் நாழிகை நேரம் ஒருங்கு சேரும். அக்காலத்தில் ஒருகணை விடுத்து அவற்றை அழித்தல் அல்லாமல் வேறெவ்வகையானும் அழிக்க முடியாது. இவ் வசுரர்கள் திருமால் முதலான தேவர்களையும் வெற்றிக் கொள்ளும்படியான மேன்மையைப் பெற்றிருந்தார்கள். மூவரும் திருநீறு, சிவகண்மணி முதலியவற்றை அணிந்து சிவவழிபாடு செய்பவர்களாக இருந்தும் தேவர்களுக்குத் துன்பம் செய்பவர்களாக இருந்தார்கள். அதனால், திருமால் புத்தகுருவாகச் சென்று இவர்களை மயக்கினர். அதனால் சைவசமயக் கொள்கையில் வெறுப்புற்று மயங்கினாகள். இவ் வசுரர்களைத் தொலைக்குமாறு தேவர்கள் சிவபெருமானை வேண்டினார்கள்.

சிவபெருமான் தேவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கினார். நிலம் தேராகவும், கதிரவனும் சந்திரனும் இரு உருளைகளாகவும், நான்கு மறைகள் நான்கு குதிரை களாகவும், நான்முகன் தேரோட்டியாகவும், மறைமொழி கடிவாளமாகவும், ஓம் சாட்டையாகவும், ஆதிசேடன் நாணா கவும் கொண்டு முப்புரத்தை அடைந்தார். தேவர்கள் ஒவ் வொருவரும் முப்புர அழிவு தங்களாலேயே நிறைவேறுவ தாகச் செருக்கடைந்தனர். அதனால் சிவபெருமான் நகைத்-தார். முப்புரம் எரிந்தது''[102]

இதனைத் திருமுருகாற்றுப்படை, ''மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வன்''[103] என்று கூறுகிறது.

### காரியுண்டிக் கடவுள்

தேவர்கள் அமிழ்தம் பெற எண்ணி வடமேருவை மத்தா கவும், வாசுகிப் பாம்பை நாணாகவும் கொண்டு கடலைக் கடைந்தனர். அவ்வாறு கடைந்தபோது வலி பொறுக்கலாற் றாது. வாசுகி நஞ்சைக் கக்கியது. அந்நஞ்சு எல்லா

உலகினையும் அழிக்கத் தொடங்கியது. அப்போது அமரர் முதலியோர் செஞ்சடைக் கடவுள் திருவடியின்கண் புக, அக்கடவுள் அதனை நெஞ்சில் நிறுத்தி உலகைக் காத்தருளி னார்.

> ''நீரகம் பனிக்கு மஞ்சுவரு கடுந்திறற்
> பேரிசை நவிர மேஎ யுறையுங்
> காரி யுண்டிக் கடவுள்''[104]

எனும் அடிகள் மேற்கூறிய கதையை விளக்கும்.

## கொற்றவை

கொற்றவை வழிபாடு சங்க காலத்தில் இருந்தது. இது பிற்காலச் சாக்த மதத்திற்கு அடிப்படையாக அமைந்தது. தொல்காப்பியர் போருக்குத் தொடக்கமான வெட்சித்திணை பற்றி விளக்கும்போது கொற்றவை நிலை, துடிநிலை என்னும் இரண்டை அதன் சிறப்புத் துறைகளாகக் கூறியுள்ளார்.[105]

பத்துப்பாட்டில் கொற்றவை குறித்த செய்திகள் இடம் பெற்றுள்ளன. கொற்றவைக்கு[106] மலைமகள்,[107] பழையோள்,[108] துணங்கை[109] முதலிய பெயர்களுள. கொற் றவை பத்துப்பாட்டில் வெற்றி நல்கும் தெய்வமாகக் கருதப் பட்டாள். காட்டாக, நெடுநல்வாடையில் போருக்குத் தலை- வனைச் செலவு விடுத்த தலைவியின் தோழியர் தலைவன் வெற்றியுடன் மீளவேண்டுமென்று வெற்றித் தெய்வமாகிய கொற்றவையை வணங்குகின்றனர்.

> ''இன்னா வரும்படர் தீர விறறந்
> தின்னே முடிகதில் லம்ம''[110]

என்னும் அடிகளும்,

> ''வெற்றி வெல்போர்க் கொற்றவை''[111]

என்னும் தொடரும் வெற்றிக்குறிய தெய்வமாகக் கொற்றவை கருதப்பெற்றாள் என்று அறியச் சான்றுகளாக அமைகின்றன. அவள் படைக்கலங்களிலும் வீற்றிருந்தாள்.[112]

கொற்றவை உருவம் நெடிய கதவுகளில் செதுக்கப் பெற்று இருந்தது,[113] தெய்வப் படிமத்திற்கு நெய் பூசினர். அதனால் தெருக்கதவு கரிந்திருந்தது.[114]

காவிரிப்பூம்பட்டினத்தில் பூதங்கள் வாசலிலே காத் திருக்கும் புகுதற்கரிய அச்சத்தையுடைய காளி கோட்டத்தில், கல்லைத் தின்னும் அழகிய புறவுகளுடனே குடியிருப்பாகத் தங்கும் இளமரச்சோலை சூழ்ந்திருந்தது[115] என்பதால், சோலை சூழ்ந்த பகுதிகளில் கொற்றவை கோயில் இருந்தது எனலாம்.

## கௌமாரம்

மைவரை உலகத்தின் கடவுள் சேயோனாவான். சேயோ-னைத் தெய்வமாகக் கொண்டு வழிப்படும் சமயம் கௌமாரம் எனஅழைக்கப்படும். சேயோன் ''கௌமாரத்தசையிலேஇருக்கி றவனாதலால் அவனை வருணிக்கும் வழிபாட்டிற்குக் கௌமாரம்''[116] என்று பெயர்.

பத்துப்பாட்டில் முருகப் பெருமானுக்கு 'ஆல்கெழு கடவுட் புதல்வன்', 'ஆலமர் செல்வன்', 'குறிஞ்சிக் கிழவன்', 'கொற்றவை சிறுவன்', 'செவ்வேள்', 'சேய்', 'பழையோள் குழவி,' 'முருகன்', 'மதவலி', 'வாணுதல் கணவன்', 'வானோர் தானைத் தலைவன்'[117] முதலிய பெயர்களுள. சங்க இலக்கியத்தில் 'முருகு' என்னும் சொல் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.[118]

## முருகன் தோற்றம்

முருகனின் பிறப்புப் பற்றி இலக்கியங்களில் வேறுபட்ட கருத்துகள் நிலவி வருகின்றன.[119] திருமுருகாற்றுப்படை,

''ஐவரு ளொருவ னங்கை யேற்ப
அறுவர் பயந்த வாறமர் செல்வ''[120]

என்று முருகன் தோற்றம் பற்றிக் கூறுகிறது. ஐவருள் ஒருவன் என்பது தீயைக் குறிக்கும். அங்கை ஏற்ப என்றதனால் சிவனிடமிருந்து இந்திரன் வாங்கிய கருப்பத்தினை முனிவர் பெற்றுத் தரிக்கலாகாமையான் இறைவனுள் ஒரு கூறாகிய முத்தீக் குண்டத்தில் இட்டதனைக் கூறலாம்.

''அறுவேறு வகையி னஞ்சுவர மண்டி''[121]

என்னும் திருமுருகாற்றுப்படைத் தொடருக்கு ஆறாகிய வேறுபட்ட கூற்றத்தாளே அச்சம் தோன்ற மிக்குச் சென்று எனப் பொருளுரைத்து, முருகன் தோற்றம் பற்றிப் பின்வருமாறு உரைக்கின்றார் நச்சினார்க்கினியர்:

''இறைவன் வதுவை செய்துகொண்ட நாளிலே இந்திரன் சென்று நீ புணர்ச்சி தவிரவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அவனும் அதற்கு உடம்பட்டு அது தப்பானாகிப் புணர்ச்சி தவிர்ந்து கருபத்தை இந்திரன் கையிற் கொடுப்ப, அதனை இருடிகள் உணர்ந்து அவன் பக்க நின்றும் வாங்கித் தமக்குத் தரித்தல் அரிதாகையினாலே இறைவன் கூறாகிய முத்தீக்கட் பெய்து அதனைத் தம் மனைவியர் கையிற் கொடுப்ப, அருந்ததி யொழிந்த அறுவரும் வாங்கிக்கொண்டு விழுங்கிச் சூன்முதிர்ந்து, சரவணப் பொய்கையிற் பதுமப் பாயலிலே பயந்தாராக, ஆறு கூறாகி வளர்கின்ற காலத்து இந்திரன் தான் இருடிகளுக்குக் கொடுத்த நிலையை மறந்து ஆண்டு வந்து வச்சிரத்தான் எறிய அவ்வாறு வடிவும் ஒன்றாய் அவனுனே பொருது அவனைக் கெடுத்துப், பின் சூரபன்மாவைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆறாகிய வேறுபட்ட கூற்றாலே மண்டிச்சென்றதென்று புராணங்கூறிற்று''[122]

நச்சினார்க்கினியரின் இருக்கருத்து முருகனின் பிறப்பினைத் தெளிவுபடுத்துகிறது.

## முருகன் - திருமுகம்

தாமம், முகுடம், பதுமம், கிம்புரி, கோடகம் ஆகிய ஐவடி வினையுடைய முடிகள் முருகன் தலையில் சிறப்புடன் விளங்கின. வேறுபட்ட நிறங்கொண்ட அழகிய மணிகள் மின்னல் போன்று காட்சி யளித்தன. பொன்னாற் செய்த மகரக்குழை ஒளிபெற்று விளங்கியது. அழகிய முகத்தினை இவ்வணிகலன்கள் அணிசெய்தன. திங்களைச் சூழ்ந்த விண்மீன்கள் போன்று முருகனின் திருமுகத்தைச் சூழ்ந்து இவை விளங்கின.

முருகனுக்கு ஆறு திருமுகங்களுள. ஒவ்வொன்றும் ஒவ் வொரு செயலைச் செய்தன.

## முதல் திருமுகம்

ஆணவ மலமாகிய பேரிருளாலே உலகம் மறைக்கப் பட்டுள்ளது. அவ்விருள் நீங்கும் பொருட்டுப் பல சுடர்களைத் தோற்றுவித்தது முதல் திருமுகம்.[123]

## இரண்டாம் திருமுகம்

இம்முகம் அடிமைநெறி, மகனெறி, தோழமை நெறி, அறிவு நெறி ஆகிய நான்கு நிலைகளின் நின்று வழிபடும் அடியவர்களுக்கு ஏற்டப் பொருந்தி அமையும். அடியவர்கள் அகத்தானும் புறத்தானும் அகப்புறத்தானும் வழிபடும்போது அவ்வவற்றிற்கு ஏற்பத் தோன்றி இம்முகம் அருள் செய்யும். மேலும், இது முனிவர், தேவர், அருமறை மந்திரந்தை உச்சரித்துப் பாடுவார், வெறியாட்டயர்வோர் ஆகியோருக்கு இனிமையாக ஒழுகி அவர் வேண்டும் வரங்களை அருளும் இயல்புடையது ஆகும்.[124]

### மூன்றாம் திருமுகம்

மந்திர விதியின் மரபுளி வழா அந்தணர் கன்ம, தவ, செப, தியான, ஞான வேள்விகளைச்செய்யும்போது இடையூறு நேராவண்ணம் பாதுகாத்து அருள்செய்யும் இயல்புடையது இத்திருமுகமாகும்.[125]

### நான்காம் திருமுகம்

இம்முகம் நூல்களால் காட்டப்பெறாத வீடுபேற்றினைத் தன் அன்பர்கள் காவலுறும்படி ஆராய்ந்து உணர்த்தித் திங்கள்போலத் திசை விளக்கும்.[126]

### ஐந்தாம் திருமுகம்

இம்முகம் போர்மேல் சென்றவிடத்து வேகுளியுடன் அசுரர் முதலியோரை அழித்து மறக்கள வெள்வி செய்யும்.[127]

### ஆறாம் திருமுகம்

இத்திருமுகம் குறச்சிறுமி வள்ளியோடு மகிழ்ந்து இருக்கும்.[128]

### முருகன் திருக்கைகள்

முருகப்பெருமானுக்குப் பன்னிரு திருக்கைகள் உள. அவை திருமுகங்களின் செயலுக்கு ஏற்பத் தொழில் செய்யும் இயல்புடையன. செவ்வரி மூன்றனையும் தம்பால் வாங்கிக் கொண்டனவும், வலி மிக்கனவும், வேற்படையை எறிந்து வளவிய புகழ்பெற்றுப் பகைவர் உடலைப் பிளந்து மீண்டும் வாங்கிக் கொள்வனவும் ஆகிய திருத்தோள்களிலே பன்னிரு கரங்கள் சிறப்புடன் விளங்கின.

### *முதலிணைத் திருக்கைகள்*

விட்டுலகு செல்லும் துறவிகட்குப் பாதுகாவலாக இருந்த ஒருகை; மற்றொரு கை இடையிலே வைக்கப் பட்டது.[129]

### *இரண்டாமிணைத் திருக்கைகள்*

ஒரு கை கலிங்கத்தின் மீது இருக்க, அதற்கு இணை யான மற்றொரு கை அங்குசத்தைச் செலுத்தி நிற்கும்.[130]

### *மூன்றாமிணைத் திருக்கைகள்*

ஒரு கை பெரிய பரிசையையும் மற்றொரு கை வேற்படை யையும் வலமாகச் சுழற்றும்.[131]

### *நான்காமிணைத் திருக்கைகள்*

ஒரு கை மார்போடு விளங்க, அதற்கு இணையான கை தாரோடு பொலிந்து நிற்கும்.[132]

### *ஐந்தாமிணைத் திருக்கைகள்*

ஒரு கை கீழ்நோக்கித் தொடி சரியக் களவேள்விக்கு முத்திரை கொடுக்கவும், மற்றொரு கை இனிய ஓசையை யுடைய மணியை ஒலிப்பிக்கும்.[133]

### *ஆறாமிணைத் திருக்கைகள்*

ஒரு கை உலகிற்கு மழையைப் பொழிவிக்க, மற்றொரு கை தெய்வ மகளிர்க்கு மணமாலை சூட்டி நிற்கும்.[134]

### முருகன் - மாலை

முருகன் கடப்ப மாலையை அணிந்தவன். இதனால் கடம்பன் எனும் பெயர் முருகனுக்கு உண்டு. ''கடலில் நீரை முகந்த மேகங்கள் விண்ணிடத்தே சென்று மழைபொழிந்து நிற்ப, காட்டிடத்தே பெரிய அடியினையுடைய செங்கடம் பினது பூவால் உருவாகிய மாலையை முருகப் பெருமான் அணிந்துள்ளான்''[135] என்றுதிருமுருகாற்றுப்படை கூறுகிறது.

### முருகன் - வாகனம்

முருகனது வாகனம் மயிலாகும். இது மஞ்ஞை,[136] பிணிமுகம்[137] முதலிய பெயர்களால் அழைக்கப்படும்.

### முருகன் - கொடி

முருகன் சேவற்கொடியை உடையவன். பத்துப்பாட்டில் மூன்று இடங்களில்[138] இச்செய்தி வந்துள்ளது.

### முருகன் - கோவில்

முருகப் பெருமானுக்குப் பண்டைக் காலத்தில் திருப்பரங் குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், பழமுதிர்சோலை, குன்றுதோறாடல் ஆகிய ஆறுபடை வீடு களிலும் கோயில் இருந்தது.

### திருப்பரங்குன்றம்

இக்குன்றம் 'இன்றுள்ள மதுரைக்குத் தென்மேற்கில் ஏறத்தாழ ஐந்துக் கல் தொலைவில் உள்ளது.'[139] சங்க காலத்தில் வழிபாட்டுத் தலமாக இருந்துள. இதற்கு 'நெடி- யோன் குன்றம்',[140] 'தண்பரங்குன்றம்'[141] முதலிய பெயர்

களுள. மதுரைக்கும் பரங்குன்றுக்கு மிடையே வயல்கள் உண்டு. வயலில் உள்ள தாமரை மலரில் வண்டுகள் இரவில் தங்கும். வைகறைப்போதில் தேன்மணக்கும் நெய்தற் பூவில் உள்ள தேனை நுகரும். ஞாயிறு தோன்றியவுடன் திருப்பரங் குன்றத்திலே உள்ள சுனைப்பூக்களில் சென்று ஆரவாரிக்கும்.[142]

## திருச்சீரலைவாய்

இது திருநெல்வேலி மாவட்டத்தில் கடற்கரைப் பட்டினத் திற்குத் தெற்கில் உள்ளது. கடலலைகள் மோதும் கரை யோரத்தில் அமைந்துள்ள கோவிலாதலின் அலைவாய் என வழங்கப்பட்டது. சங்க இலக்கியங்கள் அலைவாய்,[143] செந்தில்[144] முதலிய பெயர்களில் இத்திருத்தலத்தைக் குறிக் கின்றன. இன்று இஃது திருச்செந்தூர் என வழங்கப்படுகிறது.

தேவதுந்துபி முழங்கவும், கொம்புகள் மிக்கு ஒலிப்பவும், வெள்ளிய சங்குகள் முழங்கவும், இடியை ஒப்ப முழங்கும் முரசோடே வெல்கொடியிலிருந்து மயில் அகவவும் ஆன்றோர் களால் பல்காலம் புகழப்படும் நாமனூ ரலைவாய் எனும் திருப்பதியில் முருகப்பெருமான் உறைகிறான்.[145]

## திருவாவினன்குடி

இன்று பழனி என்று வழங்கப்பெறும் திருத்தலத்தையே நக்கீரர் திருவாவினன்குடி என்கிறார். ‘ஆவியரசனுக்குரிய நகர் போதினி என்பதாகும்.’[146] இப்பொதினியே பிற்காலத் தில் பழனி என மாறி வழங்குகிறது என ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.[147] இன்றுள்ள பழனி என்னும் தலத்தில் மலையடிவாரத்தில் உள்ள கோவிலே ஆவினன்குடி என்னும் ஊரைச் சேர்ந்த பழைய கோவில். மலைமீதுள்ள கோவில் பிற்காலத்தில் கட்டப்பட்டதாகக் கூறுவர். இங்குப் பல்திறத்து முனிவர்களும், கந்தருவர்களும், கருடக் கொடியோனும்,

மழுவாள் நெடியோனும், ஆயிரங்கண்ணோனும், முப்பத்து மூன்று தேவர்களும், பதினெண் கணங்களும் வந்து காணும் படி முருகன் வீற்றிருக்கிறான்.[148]

### திருவேரகம்

ஏரகம்-அழகிய அகம் என்று பொருள். ஏரகம் எனும் சொல்லிற்கு வடமொழியில் கோரைப்புல் என்னும் பொரு ளுண்டு. ஏரகம் மிகுதியாக இருந்த காரணத்தால், திரு என்னும் அடைகொடுத்துத் திருவேரகம் என இவ்வூர் பெயர் பெற்றிருக்கலாம். அருணகிரிநாதர் வடநாட்டிலுள்ள சுவாமி மலை எனும் தவமே ஏரகமாக விளங்கிற்று என்கிறார்.

இங்கு ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் ஆகிய இயல்பினில் வழுவாது, நல்லகுடி பிறந்தாரும், நாற்பத்தெட்டாண்டு வரை பிரமசரிய விரதம் காத்தவரும், அறம்கூறும் தன்மையினையும் முத்தீச் செல்வத்தினையும் உடையவராகிய அந்தனர் பலரும் இருந்தனர். அவர்கள் முருகப் பெருமானை வழிபடும் காலமறிந்து 'சரவணபவ' எனும் ஆறெழுத்து மந்திரத்தைக் கூறுவர். பின்னர் பூணூலை யும் ஈரம் உலராத ஆடையுடன் ஆறெழுத்து மந்திரத்தை உச்சரித்து நறிய மலர் தூவி அருச்சனை புரிவர்.[149]

### குன்றதோறாடல்

குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் வாழுமிடம் என்பர். இஃதுஎப்பகுதிஎன்பதைத் திருமுருகாற்றுப்படை தெளிவாகக் கூறவில்லை.

### பழமுதிர்சோலை

இவ்விடம் இறைவனின் ஆறுபடை வீடுகளுள் ஒன்றாகத் திகழ்கிறது. இக்காலத்தில் திருமால் திருப்பதியாக விளங்கும் திருமாலிருஞ்சோலை மலையே பழமுதிர்சோலை என்பர்.

### பிற இடங்கள்

பேற்கூறிய ஆறு படைவீடுகள் மட்டுமன்றிப் பின்வரும் இடங்களிலும் முருகன் உறைகிறான்:

''காடும் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்புஞ்
சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர''[150]

இதிலிருந்து பண்டைத் தமிழ்மக்கள் அழகுபொருந்தும் இடங்களையே முருகன் கோவிலுக்குரிய இடமாகத் தெரிவு செய்தனர் என அறியமுடிகிறது.

### முருகன் - மந்திரம்

முருகனுக்கு ஆறெழுத்து மந்திரம் உண்டு. அது 'சரவணபவ' என்பதாகும் இதனை 'நமக்குமாராய' எனவும் வழங்குவர்.

இம்மந்திரம் பற்றி,

''மந்திர விதியின் மரபுளி வழாஅ
வந்தனர்''[151]

என்றும்,

''ஆறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கின் நவிலப் பாடி''[152]

என்றும் திருமுருகாற்றுப்படை உரைக்கின்றது. இம்மந்திரத்தை வெளிப்படையாகவும் மௌனமாகவும் உச்சரித்து உள்ளனர்.[153] இதனால் பண்டை வினைகள் அறும் என்னும் எண்ணம் இருந்தது.

தணிந்த பின் அதனைத் தம் பத்தினிகளிடம் கொடுத்தனர். அருந்ததி ஒழிந்த மற்றயவர் அறுவரும் அதனை உண்டு, கருவுற்று, ஆறு குழந்தைகளைப் பெற்றெடுத்தனர். அந்த ஆறு குழந்தைகளும் இமய மலையிலே உள்ள சரவண பொய் கையிலே விடப்பட்டன. அவைகளை பார்வதி ஒன்றாக வாரி யெடுத்தாள். ஆறுமுகமும் பன்னிரு கைகளுமாய் முருகன் காட்சியளித்தான்'' என்பது புராணக்கதை.
இவ்வரலாறு,

''ஐவரு ளொருவ னங்கை யேற்ப
வறுவர் பயந்த ஆறமர் செல்வ''[160].

என்னும் அடிகளால் குறிக்கப்படுகிறது.

## *நான்முகனைச் சிறையிடல்*

''முருகக் கடவுள் திருக்கைலையில் முதல் கோபுரத்தில் தம் துணைவர்களோடு எழுந்தருளியிருந்தார். அப்பொழுது நான்முகன் தேவர்களோடு சிவபெருமானை வணங்குவதற்கு சென்றான். அவன் முருகக் கடவுளைக் கண்டான். கீழே விழுந்து எண்வகை உறுப்புகளும் நிலத்தில் தோயுமாறு வணங்கவில்லை. இரண்டு கைகளையும் குவித்துக் கும்பிட்டுச் சென்றான். முருகக் கடவுள் நான்முகனை 'இங்கேவா' என்று கூப்பிட்டார். அவன் வந்தான். 'நீ என்ன தொழில் செய்கிறாய்?' என்று உசாவினார். 'நான் படைப்புத் தொழில் செய்கிறேன்' என்றான் நான்முகன். 'நல்லது. மறை வருமா?' என்று கேட்டார், முருகக் கடவுள். 'வரும்' என்று கூறிவிட்டு, மறையை ஓதத் தொடங்கினான். முதலில் 'ஓம்' என்று சென்னான். முருகக்கடவுள் 'ஓம் என்பதற்குப் பொருள் என்ன?' என்று உசாவினார். நான்முகன் பொருள் கூற முடியாமல் திகைத்தான். 'படைப்புத் தொழில் செய்வது இப்படித்தானா?' என்று கேட்டு, நான்முகனுடைய நான்கு தலைகளும் குலுங்குமாறு குட்டினார். தம்முடைய தொண்டர்

களைப் பார்த்து 'இவனைச் சிறையிலடையுங்கள்' என்று கூறினார். அவர்களும் அவ்வாறே நான்முகனைச் சிறையில் அடைத்தனர்.''[161]

''நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
அலகங் காக்கு மொன்றுபுரி கொள்கை
... ... ... ...
நான்முக வொருவற் சுட்டிக் காண்வர''[162]

என்னும் அடிகள் மேற்கூறிய கதையை விளக்கும்.

## *விறல்வேல் வேன்றி கொடுத்தோன்*

ஒரு காலத்தில் நல்லியக் கோடனுக்குப் பகை பெருகிற்று. அதனால் அவனஞ்சி முருகப் பெருமானை வழிபட்டான். முருகப் பெருமான் அவன் வழிபாட்டை ஏற்றுக் கனவில் தோன்றி, ஒரு கேணியைச் சுட்டிக் காட்டி, 'இக்கேணியிற் பூத்த மலர்களை நின்னை எதிர்க்கும் பகைவர்மேல் எறிவாயாக; இவற்றால் பகையழியும்' என்று கட்டளையிட்டு மறைந்தார். இறைவன் தன்னருளால் அக்கேணியிலுள்ள மலர்களையெல்லாம் வேலாக மாற்றி வைத்தார். பகைவர் போருக்கு வந்தபோது கேணி மலர்களை அவர் மீதெறிய, அம்மலர்களெல்லாம் வேலாய் மாறிப் பகைவரை அழித்தன. இதனை,

''திறல்வே னுதியிற் பூத்த கேணி
விறல்வேல் வென்றி வேலூர் எய்தின்''[163]

என்னும் சிறுபாணாற்றுப்படை அடிகள் விளக்கும்.

## *தகரன் மஞ்ஞையன்*

நாரத முனிவன் ஒரு காலத்தில் வேள்வி செய்தான், அவ்வேள்வியினின்று ஓட்டுக்கிடாய் ஒன்று தோன்றி மூன்று உலகையும் துன்புறுத்தியது. துன்பத்தைப் பொறாத தேவர்கள் கொற்றவைச் சிறுவனிடம் முறையிட, முருகன்

அதனை அடக்கி ஊர்தியாகக் கொண்டான். இதனால் முருகனுக்குத் 'தகரன்' எனும் பெயருண்டு. 'மஞ்ஞையன்' எனும் பெயரும் முருகவேளுக்கு உண்டு. கடலிடையில் மாமரமாய் நின்ற அசுரனைத் தடிந்தபோது அசுரன் உடல் இரு கூறானது. அவ்விரு கூறில் ஒன்று மயிலாகவும், மற்றொன்று கோழியாகவும் வர, அவற்றை முருகன் ஊர்தியாகவும் கொடியாகவும் கொண்டான்.[164]

## அசுரர்களோடு போரிடல்

உலகிலே பழமையான குளிர்ந்த கடல்நீர் கலங்கும்படி உள்ளே நுழைந்துபோய், அசுரர்களின் தலைவனாகிய சூரபத்மனைக் கொன்ற ஒளிபொருந்திய வேல் இலை வடிவானது.

> ''பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
> சூர்முதறடிந்த சுடரிலை நெடுவேல்''[165]

இது முருகப் பெருமான் சூரபதுமனோடு போரிட்ட செய்தியைக் கூறுகின்றது. அசுரரோடு போரிட்ட செய்தி சில இடங்களில்[166] மட்டும் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளது.

## நாற்பெருந் தெய்வம்

### இந்திரன்

நூறு வேள்விகளை முடித்த தேவர்களுக்குத் தலைவன் இந்திரன். நான்கு தந்தங்களையுடைய ஐராவதம் எனும் யானைமீது அமர்ந்து விளங்கும் திருக்கிளர் செல்வன். இந்திரப் பதவிபெற எண்ணுவோர் பரிவேள்வி செய்ய வேண்டும். இவ்வேள்வி செய்யும்போது குதிரையை விடுவித்து அது செல்லும் திசைக்கண்ணுள்ள மன்னரையெல்லாம் வெற்றி கொள்ளல் வேண்டும். இந்திரன் இவ்வாறு வெற்றி கொண்டதால் 'சதமகன்' எனும் பெயர் பெற்றான்.[167]

### புராணக்கதை

தேவர் தலைவன் இந்திரன் அகலிகைமேல் பெருங்காமம் கொண்டிருந்தான். அவளை எவ்வாறேனும் அடைய வேண்டும் என்ற அவன் எண்ணம் அவளது திருமணத்திற்கு முன் கைகூடவில்லை. எனினும் அவள் கௌதம முனிவருக்கு மனைவியான பின்பு ஒருநாள் நள்ளிரவில் சேவற்கோழி வடிவுகொண்டு கூவி, முனிவரை நீராடச் செல்ல வைத்து விட்டான். பின் அவனது வஞ்சகச் சூழ்ச்சினைய அறிந்து கொண்ட அம்முனிவர் வீடுநோக்கி விரைந்தார். அவர் வருவதை அறிந்த இந்திரன் பூனை வடிவுகொண்டு மறைந்ததான். எனினும் அப்முனிவர் அதை உணர்ந்து கொண்டு அவன் எதை நாடி வந்தானோ அஃது ஆயிரமாக அவன் உடம்பெல்லாம் விளங்குக எனச் சபித்தார். அகலிகையைக் கல்லாக்கினார்.

''நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து''[168]

என இக்கதையைத் திருமுருகாற்றுப்படை அடி விளக்குகிறது.

### எமன்

எமன் அழிக்கும் தொழிலை உடையவன். இவன் சங்கக்காலக் கடவுளர் நால்வருள் ஒருவனாக விளங்கினான். இவனைப் பற்றிய குறிப்புப் பத்துப்பாட்டில் இரு இடங்களில்[169] வந்துள்ளது.

### வருணன்

'வருணன் மேய பெருமணல் உலகமும்' எனத் தொல் காப்பியர் கடலும் கடற்சார்ந்த பகுதிக்கும் வருணனைக் கடவுளாகக் கூறுகிறார்.[170] தாழையின் அடியிலே நின்ற வெண்டாளியின் குளிர்ந்த மலரால் புனைந்த மாலையினை உடையவராய், சினையையுடைய சுறாமீனைக் கொன்று, அதன் கோட்டைப் பறித்து, மணலில் நட்டு வழிபாடு

செய்தனர்[171] வருண வழிபாடு முழுமதி நாளில் நடைபெற்றது.[172]

### பிரமன்

பிரமனுக்குச் சங்க காலத்தில் வழிபாடு நடைபெறவில்லை. பெரும்பாணாற்றுப்படை, 'நீணிற உருவினான மாலின்திருவுந்தித் தாமரையில் பிரமன் தோன்றினான்' என்று கூறுகிறது.[173] இன்ப, துன்பங்கள் நிறைந்த இவ்வுலகினைத் துய்க்க உயிர்களைப் படைத்தல் அவனது தொழிலாகும்.

## பிற தெய்வங்கள்

### காடுறை கடவுள்

பண்டைக் காலத்தில் கிராமங்கள், நகரங்கள் மட்டுமன்றிக் காடுகளிலும் தெய்வங்கள் இருந்தன. பொ. வே. சோமசுந்தரனார் ''காடுறை கடவுள்களாவன காளி, கூளி முதலியன''[174] என்கிறார். இதை நோக்கும்போது தற்காலத்திலும் காடுகளில் பெண்தெய்வம் இருப்பதாக வணங்கிவரும் வழக்கம் இருப்பதைக் காணலாம். இத்தகு தெய்வங்களுக்கு நடைபெற்ற வழிபாடு பற்றிப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.[175]

### மலையில் உறையும் தெய்வங்கள்

நன்னன்சேய் நன்னனிடம் செல்லும் பாணனை ஆற்றுப்படுத்தும் பாணன் ''உருமேறு முழங்கும் தொகுதியையுடைய பெருமலை பிற்பட வியப்புமிக்க இனிய யாழினியுடையநும் விறலியர் குறிஞ்சிப்பண்ணைப் பாடாநிற்ப, நீவிரும் கரிய பக்க மலையிலே உறையும் தெய்வங்களைக் கைதொழுது பரவிச் செல்வீர்!'' என்கிறான்.[176] இதனால் பண்டைக் காலத்தில் சிறுதெய்வம் ஏதேனும் மலையில் வழிபாட்டிற்குரியதாக இருந்திருக்கலாம் என்று அறியப்படுகிறது.

## இல்லுறை தெய்வம்

சமய வழிபாட்டிற்குரிய இடங்கள் மட்டுமன்றி வீடுகளிலும் தெய்வம் வைத்து வழிபடும் வழக்கம் இருந்துள்ளது. இதனை 'இல்தெய்வம்' என அழைப்பர். பத்துப்பாட்டில் நான்கு இடங்களில்[177] இக்குறிப்பபு வருகின்றது. இத்தெய்வத்திற்கு அணங்கு, தெய்வம் ஆகிய பெயர்களுள. செல்வரும் அவர்களால் மேம்பட்ட செல்வரும் நெல்லும் மலரும் தூவி வழிப்பட்டனர்.[178] இத்தெய்வம் இரவில் ஊரில் உலவுவதாக மக்கள் நம்பினர்.[179]

## நவக்கிரகம்

நவக்கிரகம் பற்றிய குறிப்பு ஓரிடத்தில் மட்டும் வருகின்றது.[180] பல்திறத்து மறவர்கள் ஒருங்கே கூடி இருப்பதற்கு உவமையாக நாள்மீன்களையும் கோள்மீன்களையும் புலவர் கூறுகின்றார். இங்கு நாள்மீன் என்பது அசுவணி, பரணி முதலிய இருபத்தேழு; கோள்மீன் என்பது சூரியன் முதலிய ஒன்பது கடவுளர் ஒருங்கிருந்த நவக்கிரகம்.

## திசைத்தெய்வம்

அரண்மனைக்குத் திருமுளை சார்த்துச் செய்யும் நாளில் அதாவது சித்திரை மாதம் பத்தாம் நாள் தொடங்கி இருபதாம் நாள் முடிய நிகழும் நாள்களில் யாதானுமொரு நாளில் பகல் பதினைந்து நாழிகை அளவில் ஞாயிற்று மண்டிலம் நிலத்தின் நடுவே இயங்குமென்றும், அங்ஙனம் இயங்குதலை நிலத்தை அண்மையவாய் இரண்டு செவ்விய கோல்களை நட்டுக் கோல்களில் நிழல் சாயாதவாறு தாரையாக ஓடுகின்ற இயக்கம் நிகழ்வதை அறிவதற்கு முன் திசைத்தெய்வங்களை வணங்கினர்.[181] எட்டுத் திக்குகளை யானை தாங்குவதாக மக்கள் நம்பினர்.[182]

## நடுகல் வழிபாடு

> ''போரில் தன்னால் இயன்றவரையில் சிறப்புறப் போர் புரிந்து உயிர்விட்ட வீரனது உடலைப் புதைத்த அல்லது எரித்த இடத்தில் ஒரு கல்லை நடுவர். அக்கல்லில் அவனது உருவத்தையும் பெயரையும் இன்ன போரில் இவ்வாறு மாண்டான் என்ற விவரத்தையும் பொறிப்பர். அக்கல் நடுகல் எனப்படும். வீரர் சிறப்பாகவும் பிறர் பொதுவாகவும் நடு கல்லை வழிபடுவர்''[183]

என்று நடுகல் பற்றி விளக்கம் தருவர். இறந்தவர்களுக்கு நினைவுச் சின்னம் எழுப்புவதும், அந்நினைவுச் சின்னத்தில் இறந்தவர் ஆவி வடிவில் இருப்பதாக எண்ணி வழிபடுவதும் தொன்றுதொட்டுத் தமிழகத்தில் இருந்த ஒன்றாகும்.

## தொல்காப்பியத்தில் நடுகல் பற்றிய செய்தி

''நடுகல் என்றால் நட்ட கல் என்று பொருள்.''[184] 'வினையின் தொகுதி காலத்தியலும்'[185] என்னும் பழந்தமிழ் இலக்கண விதிக்கேற்ப இறப்பும் நிகழ்வும் எதிர்வும்உணர்த்தி நிற்கும் நடுகல் என்ற வினைத்தொகை பட்டினப்பாலையில் இடம் பெற்றுள்ளது.[186] அவ்வினைத்தொகை 'நட்டகல்'[187] என்றும் 'நடுங்கல்' என்றும் இலக்கிய மரபிலும் கல்வெட்டு வழக்கிலும் விரிந்து நின்று பொருள்தருகிறது. தொல்காப்பியச் சூத்திரத்திற்கு[188] உரையெழுதிய இளம்பூரணர் 'நடுகல்' என்னும் வினைத்தொகைக்கு 'நட்டகல், நடப்பட்ட கல், நாட்டிய கல்' என்றும், நச்சினார்க்கினியர் 'நடப்படுங் கல்' என்றும் பொருள் உரைப்பர்.

இந்நடுகல்லை எவ்வாறு அமைப்பது என்பது பற்றித் தொல்காப்பியம் பின்வருமாறு கூறுகிறது.

1) காட்சி : அளவும் அமைதியும் நோக்கிக் கல் தெரிந்தெடுத்தல். இவ்வாறு தெரிந்தெடுக்கப்பட்ட பின்னர் அக்கல்லிலே ஓர் உருவம் செதுக்கப் பெறும். அவ்வுருவம் சில விதிகளுக்கு உட்பட்டு அமைந்திருத்தல் வேண்டும்.

2) கால்கோள் : அக்கல்லை நடுதற்குரிய நன்னிமித்தம் பார்த்தல்.

3) நீர்ப்படை : அக்கல்லை நீராட்டுதல்

4) நடுதல் : ஏற்ற இடத்தில் கல்லை நடுதல்.

5) விழா : கோயிலுக்கு வேண்டிய கட்டடங்கள் கட்டுவதும், வீரன் செயல்களைக் கல்லிற் பொறிப்பதும் இவ்விழாவில் நடைபெறும்.

6) வாழ்த்துதல் : கல்லை வணங்குதல்.[189]

## *பத்துப்பாட்டில் நடுகல் பற்றிய செய்தி*

பத்துப்பாட்டில் நடுகல் பற்றிய செய்திகள் ஆங்காகே இடம் பெற்றுள்ளன. பகைவர் படையைத் தடுத்து நிறுத்தி மேலே செல்லவியலாது போரிடும் மறவனுக்குக் கல்லணையை உவமையாகக் கூறினார் மாங்குடி மருதனார்.[190] பாலை நில வழிகளில் நடுகற்கள் இருந்தன.[191] புகார் கடற்கரையில் கயிறுகளோடு கூடிய நெடுந்தூண்டிற் கழிகள் சார்த்தி வைக்கப்பட்ட தாழ்ந்த கூரைகளையுடைய குடிசை நடுகல்லை நடுவில் வைத்துச் சுற்றி எழுதப்பெற்ற கருவரைக்கு உவமையாகக் கூறப்படுகிறது.[192] நடுகற்கள் தனியான கல்லை உடைத்து வடிவுசெய்து பெயர் பொறிப்பது வழக்கமாகும்.[193] மரத்தின்கீழ் நடுகற்கள் அமைந்தன என்பதும் அறியப்படுகிறது.

மறவர்களுக்கு எடுக்கப்பெற்ற நடுகற்களில் அவர்கள் பெயரும் வீரச்செயலும் பொறிக்கப்பட்டு இருந்தன. இதனை,

''... ... ...மறவர்
செல்லா நல்லிசைப் பெயரொடு நட்டகல்''[194]

என்னும் அடிகளானும்,

'' ... ... ... பெயர்மருங் கறிமார்
எல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த''[195]

என்னும் அடிகளானும் அறியலாம். நடுகல்லுக்குரிய வீரர்கள், புறமுதுகிட்டு ஓடிய வீரர்களை எள்ளி நகையாடுவதுபோல் தோற்றமளிக்கும்.[196] நடுகல்லைச் சுற்றி வேல்கள் ஊன்றியும், அவ்வேல்களின்மேல் கேடகங்கள் சார்த்தியும் மதில்செய்து சிறுகோவில் அமைப்பை ஏற்படுத்துவர்.[197] இவ்வாறு அமைத்து வழிபாடு செய்யும் வழக்கம் அக்காலத்து இருந்தது. மலைபடுகடாம் நடுகல்லைக் கடவுள் என்று கூறுகிறது.[198]

நாடுகளில் மட்டுமன்றிக் காடுகளிலும் நடுகற்கள் இருந்துள்ளன. அவ்வழியே செல்லும் பாணர்கள் அங்கு யாழிசைத்து வழிபட்டுச் சென்றதாக மலைபடுகடாம் கூறுகிறது.[199]

எனவே, நடுகற்கள் இறந்த வீரர்களின் நினைவுச் சின்னமாக அமைந்து பின்வந்த வீரர்கள் அந்நடுகல்லைத் தாம் வழிபட்டால் வீரம் பெருகும் என எண்ணி அவற்றைக் கடவுளாக வழிப்பட்டு விழா எடுத்திருக்கலாம்.

### *சமய நம்பிக்கைகள்*

#### *பேய்கள்*

இறந்த உடல்களின் புலாலை இடுகாட்டிலும் போர்க் களத்திலும் உண்ணும் பேய்களைப்பற்றிய செய்திகள் சங்க

இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.[200] பத்துப்பாட்டில் ஏழு இடங்களில் பேய்களைப் பற்றிய செய்திகள் வருகின்றன.

## உருவ அமைப்பு

பேய்கள், 'நெய் பெய்தலற்ற கூந்தலினையும், நிரை ஒவ்வாத பற்களினையும், அகன்ற வாயினையும், சினத்தாலே சுழலுகின்ற பசிய கண்களையும், கொடிய பார்வையினையும், ஆந்தையும் பாம்பும் துயிலும் முலைவரை நீண்ட காதுகளை யும், 'பெரிய வயிற்றினையும் உடையனவாகக் கண்டார்க்கு அச்சம் தோன்றும்படி உருவுடன் விளங்கின என்று திருமுரு காற்றுப்படை தெரிவிக்கிறது.[201]

> ''எரிமறிந் தன்ன நாவி னிலங்கெயிற்றுக்
> கருமறிக் காதிற் கவையடிப் பேய்மகள்''[202]

என்று சிறுபாணாற்றுப்படையும் பேய்களைப் பற்றிக் குறிக்கிறது.

## செயல்கள்

பேய்கள் நிணத்தைத் தின்று வாழ்வன. மதுரைக் காஞ்சியில்,

> ''சமையல் தொழில்வல்ல பேய்மடையன் ஆண்தலைகளினாலாய அடுப்பிலே வயவேந்தர் குருதியை உலையாக வைத்துக் காய்ச்சுவான். வளைகளை அணிந்த மறவருடைய கைகளால் துழவுவான். அடியோதிங்கிய பிறபெயரா வீரர்க்குத் தானாக்கிய உணவை அளிப்பான்''[203]

என்று குறிப்பிடப்படுகிறது. பேய்கள் இவ்வாறு நிணந்தின்று வாழ்தலைப் பற்றிப் பத்துப்பாட்டில் சில குறிப்புகள் வருகின்றன.[204]

சான்றோர் இருந்த பெரிய அம்பளங்களிலே இரட்டை யான அடிகளையும், கடிய பார்வைகளையும் உடைய பேய் மகளிர் உலவி ஆடுவர்.[205] போரிற்பட்ட நல்ல தந்தங்க ளையுடைய யானைப் பிணங்களின் குருதியைக் குடித்துச் சிதறிக்கிடந்த குறைதலைப் பிணம் எழுந்து ஆடும்படிப் பேய்மகள் துணங்கைக் கூத்தாடுவாள்.[206] நள்ளிரவில் பேய் கள் நகரத்துள் உலாவும் என மக்கள் நம்பினர். பேய்களும் வருத்தும் தெய்வங்களும் கண்டார்க்கு இனிய வடிவு கொண்டு திரிந்தன என்று மதுரைக்காஞ்சி கூறுகின்றது.[207] கரிகால் வளவனால் அழிக்கப்பட்ட நாடுகளில் குலைந்த மயிருடன் பிணங்களைத் தின்னும் பிணந்தின்னிப் பேய்களும் இருந்துள்ளன.[208]

மேற்கூறிய செய்திகள்வழி, ''மனிதரின் புலாலை உண்ணும் ஒரு மக்கட் கூட்டத்தினர் சங்க காலத்திலோ அதற்கு முன்னரோ வாழ்ந்தனர் என மக்கள் நம்பினர் என்று கொள்ளலாம்''[209] என்று ஒருசார் அறிஞர் கருதுவர். இதனால் தொடக்க காலத்தில் மனிதருள் ஒரு பிரிவினர் நிணத்தை உண்டு வாழ்ந்து, பின் நாகரிகப் பண்பாட்டின் காரணமாக அச்செயலைக் கைவிட்டு இருக்கலாம் என்று எண்ண இடமுண்டு.

### கண்ணூறு

இது நம்பிக்கைகளில் ஒன்றாக விளங்குகின்றது. கண்ணூறு என்பது பிறர்கண் நோக்குவதால் ஏற்படும் துன்பங்களைக் குறிக்கும். இதுபற்றிப் பத்துப்பாட்டில் மூன்று இடங்களில் குறிப்பு வருகின்றது. குறமகள் கண்ணினால் ஏற்படும் ஊறுகளைத் தீர்ப்பதற்கு நெய்யுடன் வெண்சிறு கடுகையும் தூவுகிறாள்.[210] மதுரை மாடங்களின் கதவு நிலைகள் நெய் பல முறையும் பூசப்படுவதால் கறுத்திருந்தன.[211] மதில்களின் கதவுக்குக் காவலாகப்

புறவாயிலிலே தூக்கப்படும் துலாமரமும் 'ஐயவி' எனப்படும்.[212] இம்மரத்தில் ஐயவி அப்பியதால் இஃது இப்பெயர் பெற்றது போலும்.

## நிமித்தங்கள்

ஒரு செயலை எண்ணிப் புறப்படும் காலத்து ஆண்டு எதிர்ப்படுகின்ற, நிகழுகின்ற செயல்களை ஒட்டி அச்செயலில் வெற்றியா, தோல்வியா, அல்லது நன்மையா, தீமையா என்று முன்கூட்டியே நிமித்தம்வழி அறியப்படும். மலைபடுகடாத்தில் பரிசில் பெற்ற பாணன் தன்னை எதிர்ப்பட்ட பாணனை, நன்னன்சேய் நன்னனிடம் பரிசுபெற விரும்பினையாயின்,

> ''நன்னன்சேய் நன்னற் படர்ந்த கொள்கையோ
> டுள்ளினிர் சேறி ராயிற் பொழுதெதிர்ந்த
> புள்ளினிர் மறை ... ... ''[213]

என்கிறான். மேலும், ''நெய்மர விறகாலாக்கிய நெருப்பிலே பனிவிட்டு இனிதாகத் தூங்கி விடியற் காலத்திலே நன்னிமித்தம் பார்த்துப் போவாயாக'' என்கிறான்.[214] எனவே, பரிசைப் பெறும்போதுகூட நிமித்தம் பார்த்துச் செல்வது வழக்கமாக இருந்துள்ளது.

## விரிச்சி

விரிச்சி என்பதற்கு நற்சொல் என்று பொருள். ஒரு செயலைச் செய்யப் புகுங்கால் நன்மையாய் அல்லது தீமையாய் முடியும் என்பதை அறிந்துகொள்ள மக்கள் அருகி வாழும் ஊர்ப்பக்கத்துச் சென்று, தெய்வத்தை வணங்கி நிற்பர். அப்போது அருகிலுள்ளோர் நன்மொழி பேசினால் நன்மையென்றும், தீயசொல் பேசினால் தீமை எனவும்

கருதினர். முல்லைப்பாட்டில் பிரிந்த தலைவன் எப்போது மீள்வான் என விரிச்சி கேட்டதாகக் குறிப்பு வந்துள்ளது.[215]

### பலியிடல்

உணவு உண்ணும் முன் உணவின் ஒரு பகுதியைக் காக்கைக்குப் படைத்துவிட்டுப் பின் உண்ணுதல் வழக்கமாகும். இவ்வாறு செய்யாவிடின் துன்பம் நேரும் எனவும் நம்பினர். பொருநராற்றுப்படையில் வளர்ந்த தென்னைகள் நிறைந்த குளிர்ந்த தோப்புகளில் வாழும் மக்கள் ஆட்டுக்குருதியையோ, வேறு பலியிட்ட உயிரின் குருதியையோ கலந்த சோற்றைக் காகம் உண்ணுவதாகக் குறிப்பு வருகின்றது.[216] இதனால் பண்டைக் காலத்தில் காக்கைக்குச் சோறு பலியிடும் வழக்கம் இருந்ததை அறியலாம்

வேறு பிற நம்பிக்கைகளையும் பத்துப்பாட்டில் காண்கிறோம்.

1. மயில் தெய்வம் ஏறி நடுங்கும் என்றும், பாம்பு மாலை நேரமானதும் மாணிக்கத்தை உமிழ்ந்து வைத்து அவ்வொளியில் இரைதேடும் எனவும் நம்பினர்.[217]

2. ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர், பதினெண் கணங்கள், கந்தருவர், சூரரமகளிர் ஆகியோரைப் பற்றியும் தமிழர் அறிந்திருந்தனர்.[218]

3. காட்டில் 'சூர்' என்னும் கொடுந்தெய்வம் இருந்ததை மக்கள் நம்பினர்.[219]

4. மகளிர் தலையில் சில மலரிட்டு முடித்தலை வழக்கமாகக் கொண்டனர்.

5. நெடுநிலையில் உறையும் தெய்வங்களுக்கு வெண் சிறுகடுகையும் நெய்யையும் அணியும் வழக்கம் இருந்துள்ளது. இதனால் நிலையின்கண் தெய்வம் உறையும் என நம்பப் பட்டது.[220]

6. இரும்பு விளக்கில் திரியிட்டு, நெய்யூற்றி, தீக்கொளுத்தி, நெல்லையும் மலரையும் தூவும் வழக்கம் இருந்தது.[221]

7. சங்க காலத்தில் பல்வேறு வகையான கடவுளர்களை வணங்கியுள்ளனர். காட்டாக, மதுரைக் காஞ்சியில் வாடாத பூவினையும் இமையாத கண்ணினையும் உடைய பல்வேறு கடவுளர்களுக்கு அந்திப்பொழுதில் விழா எடுத்துள்ளனர்.[222] குறிஞ்சிப்பாட்டிலும் பல்வேறு உருவில் இருந்த கடவுளை 'வேறுபல் உருவின் கடவுள் பேணி' வழிப்பட்டதாகக் குறிப்பு வருகின்றது. இதற்கு நச்சினார்க்கினியர், ''வேறுபட்ட வடிவினையுடைய பல தெய்வங்கள்'' எனப் பொருள் உரைப் பதால் சங்ககாலத்தில் பல கடவுளர்கள் சிறப்புப் பெற்றி ருந்தமை புலப்படுகிறது. ஆனால், தலைமையான கடவுளர் மட்டுமே புகழ்பெற்று விளங்கினர்.

> ''இப்பாட்டின்கண் 'பல்வேறு உருவின் வனப்பு அமை கோதை' (103) என்ற இடத்துப் பல்வேறு நிறமுடைய மலர்கள் எனப் பொருள் தருகிறது. அடுத்தது 'எரிஅவிர் உருவின் அங்குழைச் செயலை' (105) என்ற இடத்துப் நெருப்புப் போன்ற நிறமுடைய அசோகந் தளிர்களைச் சுட்டுகிறது. எனவே, இங்குப் 'பல்வேறு நிறங்களையுடைய கடவுளைப் பேணி' எனப் பொருள் கொள்ளுதல் சிறப்புடைத்து எனப்படுகின்றது''[223]

என்று தமிழண்ணல் கூறுகின்றார். இதிலிருந்து கடவுளரை வேறுபடுத்தும் பொருட்டு நிறமிட்டனர் என்று கருதலாம்:

8. சூள் உரைக்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது. கடவுள்மீது ஆணையிட்டுக் கூறுவதைச் 'சூள்' உரைத்தல் என்பர். இதனைத் தொல்காப்பியர் 'முன்தோற்று' என்பர். குறிஞ்சிப்பாட்டில் தலைவன் முருகக் கடவுளைத் தொழுது வஞ்சின மொழியைக் கூறித் தலைவியைத் தோற்றுகிறான். இதனை உறுதிசெய்ய அருவிநீரைக் குடித்துச் சூள் உரைக்கிறான்.[224]

9. கடவுள் இல்லையென உரைக்கும் நாத்திகர் இருந்தனர்.[225]

10. பண்டைக் காலத்தில் சமயவாதம் நடைபெற்றது. மதுரைக்காஞ்சி,

"... ... விழுமியோர் குழீஇ
விழைவுகொள் கம்பலை கடுப்பப் பலவுடன்"[226]

எனக் கூறுவதால் சமய அறிவு முழுதுணர்ந்த சான்றோர் பலர் நாளோலக்க மண்டபத்தில் வாதிட்டனர் என்று எண்ண வாய்ப்புண்டு.

## *சமணம்*

### *தத்துவம்*

சீவன் தான் செய்யும் நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப நரக கதி, விலங்குகதி, மக்கள் கதி, தேவகதிகளிற் பிறந்து துன்புறும் எனச் சமணம் சாற்றுகிறது.

### *நரக கதி*

பெறுவதற்கரிய மனிதப் பிறவி எடுத்தும் ஓர் உயிர் மிகக் கொடிய செயல்களைப் புரிந்தால் அது நரகத்தை எய்தும்.

தொடர்ந்து கொலைத் தொழிலை செய்பவரும் வன்னெஞ்சம் உடையவரும் கொடுந்தொழில் இயற்றுபவரும் இம்மை மறுமை இல்லையென்பவர்ளும் செய்யும் தானம் பயன்தராது என்பவர்களும் நரகத்தை எய்துவர்.

## விலங்கு கதி

விலங்குப் பிறவியின் எய்தும் துன்பமும் நரகத்தின் துன்பத்திற்கு ஒப்பானதேயாகும். ஓரறிவு உயிர்முதல் ஐயறிவு உயிர்வரை உண்டு. ''ஓரறிவு உயிரை மற்ற எல்லா அறிவு உயிர்களும் அழிக்கும். இரண்டறிவு உயிர்முதல் ஐயறிவு உயிர்வரை உள்ள இயங்கியற் பிறவிகள் கொடிய விலங்குகளாலும் மானுடராலும் நலியப்பெற்றுத் துன்பம் எய்தும்.''[227]

## மக்கள் கதி

மக்கட் பிறவியில் எய்தும் துன்பம் மிகப் பெரியதாகும். கூனரும், குறளரும், பலநோய் உற்றவர்களும் படுந்துன்பம் பலவாகும். மேலும் விரும்பிய பொருளைப் பெறாமையினாலும், அன்புற்றவர்களைப் பிரிதலினாலும் இளமை நீங்கி மூப்பு வந்து எய்தினாலும், எழுத்தறிவின்றி இகழப்படுதலினாலும் மக்கள் துன்பம் எய்துவர்.[228] இதனைச் *சீவக சிந்தாமணியும்* உரைக்கும்.[229]

## தேவ கதி

தேவர் பிறப்பு இன்பம் நிறைந்ததுபோல் தோன்றினாலும் உண்மையில் துன்பம் தருவதாகும். தேவர்கள் கருவில் தோன்றார். அவர்தம் கால்கள் நிலத்தைத் தீண்டா. அவர் உருவத்தை எழுத இயலாது. அவர்தம் நிறம் பரிதியொளி போன்றது. அவர்கள் அணிந்த மாலைகள் வாடா. அவர்கள் கண்கள் இமையா. இத்தகு இயல்புகொண்டோர்

தேவர்கள். ஆயினும் வேறொரு தேவரால் இவர்கள் சினக்கப் பெறுவர்; அவரை இறைஞ்சி ஏவல் கேட்பர். அவருடைய ஏவலைச் செய்யுங்கால் அவர்கள் எய்தும் துன்பம் பெரிது.

மேற்கூறிய நான்கு கதிகளில் சீவன் பிறந்து உழலுவதைப் பின்வரும் 'சுவஸ்திகம்' எனும் வரைப்படம்[230] விளக்கும். இதனையே மதுரைக்காஞ்சி,

''வானமு நிலனுந் தாமுழு துணருஞ்
சான்ற கொள்கை சாயா யாக்கை''[231]

என்று கூறுகின்றது.

## சமண ஒழுக்கங்கள்

சமணர் கொல்லாமை, புலால் உண்ணாமை முதலிய ஒழுக்கங்களைப் பின்பற்றுவர். இதனை மதுரைக்காஞ்சி 'நோன்மார்'[232] என்று கூறுகிறது. பிறிதோரிடத்தில் மறைமுகமாகக் 'கொல்லாமைக் கருத்து விளக்கப்பட்டுள்ளது: ''வணிகர் எவ்விடத்தில் வாழ்வரோ அவ்விடத்திலுள்ள கடலிலே மீன்கள் துன்பமுறாது வாழ்ந்தன; வயல்களில் மாட்டு மந்தைகள் இன்பமாகக் காலம் கழித்தன. இவ்வணிகர் சுற்றத்தோடு சிறந்து இன்பமாக வாழ்வர். இவர்க்குப் பகைவர் இல்லை. மீன்கள் யாவும் பரதவர் குடியிருப்பின் அருகில் துள்ளி விளையாடும். மாடுகள் யாவும் வணிகர் குடில்களில் குறைவிலாது பெருகின. இவ்வாறு கொலை கடிந்து வாழ்ந்தனர் வணிகர்'' என்று பட்டினப்பாலை கூறுகிறது.[233]

## சமயம்

சமண சமயத்தில் விரதம் காக்கும் இல்லறத்தாரைச் சாவகர் என அழைப்பர். இவர்கள் வண்டுகள் படிந்த, பருவம் முதிர்ந்த, தேனிருந்த பூக்களையும் புகையினையும் ஊட்டி அருகனை வழிப்பட்டனர்.[234] சமணர் முக்காலத்தையும்

அறியும் இயல்புடையவர்.[235] சமணருள் கல்வியிற் சிறந்தவர் இருந்தனர். அவர்கள் விரதங்களை மேற்கொண்டு இளைக்காத மெய்யினை உடையவராக விளங்கினர்.[236] கல்லைப் பொளிந்தாற் போன்ற வாயையுடைய குண்டிகைகளைப் பல வடங்களையுடைய நூலுறியிலே கட்டித் தொங்கவிட்டுத் திரிவர்.

சமணப் பள்ளிகள் பல இருந்தன. மதுரை, காஞ்சி முதலிய சிறந்த நகரங்களிலே சமண, பௌத்த துறவிகள் தங்கித் தத்தம் சமய உண்மைகளைப் புகட்டுவதற்குப் பள்ளிகள் இருந்தன. காஞ்சி நகரில் எல்லாச் சமயத்தாரும் தொழுது விழா அயர்வரெனப் பெரும்பாணாற்றுப் படை கூறுகிறது.[237] குளிர்ந்த சிறிய குளங்களை உள்ளடக்கின முற்றத்தையுடைய பெரிய எருத்தத்திற்கு வைக்கோலிடும் பல சாலையின் அருகில் சமணப்பள்ளி இருந்தது.[238] பள்ளி எனும் சொல்லுக்கு இருப்பிடம் என்பது பொருள். பத்துப்பாட்டில் பள்ளி எனும் சொல் சமண, பௌத்தப் பள்ளிகளைக் குறிக்கும் பொதுப்பெயராக அமைந்துள்ளது.

மதுரையில் சமணப்பள்ளி இருந்தது. அது,

> ''கயங்கண் டன்ன வயங்குடை நகரத்துச்
> செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து
> நோக்குவிசை தவிர்ப்ப மேக்குயர்ந் தோங்கி
> யிறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையுங்
> குன்றுபல குழீஇ பொலிவன தோன்ற''[239]

விளங்கியது.

இதுகாறும் கண்ட செய்திகளிலிருந்து சமணர் செல்வாக்குப் பத்துப்பாட்டில் குறைவாக இருந்தது என அறியலாம். சமணப் பள்ளிகள் மிக உயர்ந்த செம்பொன்னையொத்த நிறத்தையுடைய மதிலையும், சுற்றி மலர்ச் சோலைகளையும் அருகே குளங்களையும் பெற்று விளங்கியது எனலாம்.

## புத்த சமயம்

புத்த சமயக் கடவுள் கௌதம புத்தராவார். புத்தருக்கு விழா எடுக்கப்பட்டது. காட்டாக, திண்ணிய ஒளியினை யுடைய பேரணிகலன்களையுடைய சிறு பிள்ளைகள் கூட்டத் தினுள் தம்மைப் பிரிந்து போகாதபடித் தம் கைகளான் அணைத்துப் பாதுகாப்பாராய் மேலும் அவர்பால் உள்ள விருப்பத்தாலே அவர்களைத் தம் உடலோடே பொருந்த அணைத்துத் தழீஇ, அவர்களுடைய சிறிய கைகளைத் தம் கையால் தாமரை மொட்டினைப் பற்றிய தாமரை மலர்போன்று தோன்றப் பற்றி, அவரும் தாமும் சேரத் திகழ் தலானே அழகுற்று விளங்கும் பேரிளம் பெண்டிர் பூசைக்கு வேண்டும் மலர், புகை முதலியவற்றோடே புத்தர் பெருமானை வணங்கி, வாயால் பாடி வழிப்பட்டனர். இத்தகு கோலத்துடன் பௌத்தப் பள்ளிவிளங்கியது.[240] பௌத்தர்கள் கொல்லாமை, பிறன்மனை நோக்காமை, கள்ளாமை முதலிய ஒழுக்கங்களைப் பின்பற்றியுள்ளனர்.

## முடிபுகள்

ஞாயிற்றுக்குப் பரிதி முதலிய பெயர்கள் உள. பத்துப் பாட்டில் ஞாயிற்றைப் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. தலைமை, ஆற்றல் தன்மை, அஞ்ஞானம் நீக்கும் இயல்பு ஆகிய பண்புகள்வழி அதன் இயல்புகள் தெளிவாகின்றன.

திங்களின் அமைப்பு, இயல்பு, தலைமை ஆகியனவும், செல்வனொடு நிலைஇய உரோகிணி, மதிசேரரவு முதலிய புராணக்கதைகளும் பத்துப்பாட்டில் இடம் பெற்றுள்ளன

வேதம், மறை ஆகிய சொற்கள் வேதத்தைக் குறிக்கப் பயன்பட்டுள்ளன. நான்கு வேதங்களில் ரிக், யசுர், சாமம் ஆகிய மூன்றே சிறப்புடன் விளங்கின.

பத்துப்பாட்டில் வைணவம் குறித்த கருத்துக்கள் தத்துவம், சமயம் என இரு பிரிவாக அமைந்துள்ளன. தத்துவப் பகுதி திருமாலின் காரிய காரண நிலைகளையும், முத்தொழிலையும், அந்தர்யாமித்வம் ஒழிந்த திருமாலின் ஐந்து நிலைகள் குறித்த செய்திகளையும் விளக்கும் வகையில் உள்ளன. சமயப் பகுதி கருடக் கொடி, கருடவாகனம், விழா ஆகியன பற்றியும், நூற்றெட்டுத் திருப்பதிகளில் திருவெஃகா, மாமல்லபுரம் ஆகிய இடங்களைப் பற்றியும் ளிவுப்படுத்து கிறது. மேலும் இச்சமயத்தைச் சிறப்புச் செய்யும் வகையில் நீர்செலநிமிர்ந்த மால் எனும் புராணக்கதை பத்துப்பாட்டில் இடம் பெற்றுள்ளது. திருமகள் பற்றிய செய்தி அருகியே வந்துள்ளது.

சிவன் சைவசமயக் கடவுள். அவனுக்குப் பல பெயர்கள் இருந்தன. காத்தல் பண்பு அவனுக்குண்டு. சிவனுக்கு விழா எடுத்த செய்தி பறையறைந்து தெரிவிக்கப்பட்டது. மதுரை, நவிரமலை ஆகிய இடங்களில் சிவனுக்குக் கோயில்கள் இருந்தன. சிவனைக் குறித்து ஐந்து புராணக்கதைகள் இடம்பெற்றுள்ளன.

பத்துப்பாட்டில் கொற்றவை வெற்றி நல்கும் தெய்வ மாக விளங்கினாள். வீட்டின் நெடுநிலைகளில் அவள் உருவம் செதுக்கி, நெய் பூசியுள்ளனர். சோலை சூழ்ந்த பகுதியில் அவள் கோயில் இருந்தது.

கௌமாரம் பற்றிப் பத்துப்பாட்டு தெளிவான கருத் துகளைத் தருகிறது. முருகன் பிறப்பு, திருமுகங்கள், திருக்கைகள், வாகனம், கொடி, கோயில், ஆறுபடைவீடுகள், மந்திரம், வழிபாடு, வெறியாடல் ஆகியன பற்றியும், அறுவர் பயந்த ஆறமர் செல்வன், நான்முகனைச் சிறையிடல், விறல் வேல் வென்றி தொடுத்தோன், தகரன் மஞ்ஞையன், அசுரர் களோடு போரிடல் ஆகிய புராணக் கதைகள் பற்றியும் பத்துப் பாட்டு உணர்த்துகிறது.

இந்திரன், எமன், வருணன், பிரமன் ஆகிய நாற்பெருங் கடவுளர் பற்றியும், காடுறை கடவுள், மலையுறை தெய்வம், இல்லுறை தெய்வம், நவக்கிரகம், திசைத்தெய்வம் ஆகியன பற்றியும் பத்துப்பாட்டு குறிப்பிடுகிறது.

நடுகல் வழிபாடு பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளது. பண்டைக்கால மக்கள் பேய்களைப் பற்றி அறிந்திருந்தனர், அவை பிணந்தின்று அம்பலங்களில் ஆடின. மக்கள் பேய்களைக் கண்டு அஞ்சினர்.

பிறர் கண்பட்டால் தீமை விளையும் என எண்ணல், வற்செயலுக்குச் செல்லும்போது நிமித்தம் பார்த்தல், தீமை வந்துற்ற காலை விரிச்சி கேட்டல், இறைவன் வேண்டுதல்களுக்குப் பலியிடல் ஆகிய சமய நம்பிக்கைகள் இருந்துள்ளன.

சமண சமயத்தில் பிறந்த ஓர் உயிர் நரக, விலங்கு, மனித, தேவ கதிகளில் பிறந்துழலும் என்னும் செய்தி சொல் லப்படுகிறது; பௌத்த மதக் கருத்துகள் மிகமிக அருகியே பத்துப்பாட்டில் இடம் பெற்றுள்ளன.

**அடிக்குறிப்புகள் :**

1. செந்தில் துறவி (தொகு) சௌரம் (சூரிய வழிபாடு) சாஸ்தா பதிப்பகம், 4/1 போயஸ் சாலை, சென்னை-18. மு. ப. 1969 ப. 19
2. ,,
3. முருகு. 2, சிறுபாண் 243, மதுரை 431, 385, 545, 702 மலைபடு 272, 85.
4. முருகு. 299
5. மலைபடு. 195
6. பட்டின 183
7. குறிஞ்சி 216
8. பொருநர் 136
9. பெரும்பாண். 17
10. முருகு. 3
11. நச். உரை. ப. 32
12. முருகு. 299-300
13. சிறுபாண். 242-244
14. குறிஞ்சி. 215-216
15. மதுரை. 345-347
16. பொருநர் 135-136
17. மதுரை. 384-386
18. மலைபடு. 84-85
19. பெரும்பாண். 1-2
20. பெரும்பாண்-384, முல்லை 100, மதுரை 763, முருகு 98 பொருநர் 11-12 பெரும்பாண் 480, மதுரை 8,
21. பெரும்பாண் 17, மதுரை 482, சிறுபாண் 185, மதுரை 195, சிறுபாண் 251, பட்டினப். 35, மதுரை 548, முருகு. 87.
22. நெடுநல் 162
23. குறிஞ்சி 241
24. மதுரை 193
25. மதுரை 549
26. முருகு 87-88
27. மதுரை 769
28. பெரும்பாண் 477
29. மதுரை 8
30. முருகு 96-98
31. மதுரை 193
32. மதுரை 195-196
33. நெடுநல் 161-163
34. அ. சிங்கார வேலு முதலியார், அபிதான சிந்தாமணி ஏசியன் எஜுகேஷனல் சர்விஸஸ், புதிதில்லி-110 016 மு. ப. 1983. ப. 578.
35. நெடுநல் 161-163
36. அ. சிங்காரவேலு முதலியார் மு. நூ. பக். 117-118
37. சிறுபாண். 185

38. பெரும்பாண். 383.384
39. சி. லட்சுமணன் இ.த.ஞா. ப. 9.
40. தொல். சிறப்புப் பாயிரம், வரிகள் 10-11
41. மதுரை 468, 656
42. பெரும்பாண் 300
43. மதுரை 468
44. தொல் புறத். நச் உரை நூ. 20
45. முருகு 95
46. மதுரை. 468
47. மதுரை. 655-56
48. தொல் பொருள் அகத், நூ.5
49, பெரும்பாண். 402, மதுரை 763
50, பெரும்பாண். 29-30
51. பெரும்பாண். 372
52. முருகு 151
53. மதுரை 456-58
54. மதுரை. 763
55. பெரும்பாண். 402
56. பெரும்பாண் 29-30
57. நெடுநல் 2-3
58. பெரும்பாண் 402-405
59. பெரும்பாண் 402-404
60. பெரும்பான். 391
61. மதுரை 456-58
62. பெரும்பாண். 372-373
63. பி. ஆர் நரசிம்மன், வைணவ மரபும் மெய்ப் பொருளியலும்' விஷ்ணு பதிப்பகம், நிர்மால்யம், 10-சி கிழக்குத் தெரு, அனுப்பானடி, மதுரை. மு. ப. 1987, ப. 89
64. அ. ச. பக்திவேதாந்த சுவாமி பிரபுபாதா, ஆத்ம தத்வ தாஸ் (மொ பெ.) 'பகவத் கீதை உண்மையருவில்' பக்தி வேதாந்த புத்தக நிறுவனம், 232, கீழ்ப்பாக்கம் கார்டன் தெரு, சென்னை-10.
65. மதுரை. 763
66. பெரும்பான். 402
67. பெரும்பாண் 29-30
68. முல்லை. 3
69. பெரும்பாண் 389-91
70. முருகு. 148-151
71. மதுரை. 590-91
72. சு. அ. இராமசாமிப் புலவர்; 'மே.வி.க,அ.' பகுதி. 2, பக் 989-990
73. மதுரை 763; பெரும்பாண் 402; பெரும்பாண் 29-30

முல்லை 3

74. பட்டினா. 41
75 நெடுநல் 88-89
76. பட்டினா. 291
77. முருகு. 70
78. முல்லை 2-3, பெரும்பாண். 29-30
79. மலைபடு. 356
80. பொருநர் 73
81. மதுரை. 353
82. முருகு. 256
83. பொருநர். 92
84. மலைபடு 83
85. மதுரை 41
86. மதுரை. 455
87. முருகு 154
88. முருகு 151-154
89 புறநா. பா. 1
90. மதுரை. 455
91. மதுரை 453-455
92 மதுரை. 453-460
93. மதுரை 361-362
94 மதுரை 427-428; 453-455
95 மலைபடு 81-83
96. மலைபடு. 360
97. மலைபடு 225-230
98. சிறுபாண் 205
99. முருகு. 256
100 மதுரை 40-41
101 சிறுபாண் 97
102. சு. அ. இராமசாமிப் புலவர், மே.வி.க அ ' பகுதி. 2. ப. 212.
103. முருகு. 154
104. மலைபடு. 81-83
105 தொல், பொருள். புறத் நூ. 4
106 முருகு. 258.
107. முருகு. 257
108. முருகு. 259
109. பெரும்பாண். 459
110. நெடுநல். 167-168
111. முருகு. 258
112. சிறுபாண் 101-102; 94
113. மதுரை. 353
114. மதுரை 354-355
115. பட்டினா 57-58
116. செந்தில் துறவி, 'கௌமாரம்' சாஸ்தா, பதிப்பகம். 4/1 பேரயஸ் சாலை, சென்னை-18 இ ப. 1970 ப. 13
117. முருகு 256, 255, 267, 250; பட்டினம். 154; முருகு.61 மலைபடு. 493, முருகு. 269, 275 மதுரை 611, 182 முருகு. 6, 260
118. ஐங்.,பா. 245, 247, 249; குறுந்.பா. 362; பதிற்.பா.26

119. பரி.5; 26-55 8: 127-128,
14: 25-26. கந்தபுராணம் திருவவதாரப் படலம்
42, 43, 55, 66-67, 77, 84, 85, 87, 92-96.
120. முருகு. 254-255
121. ,, 58
122. உ.வே. சாமிநாதையர் (பதி.,) பத்துப்பாட்டு மூலமும் நாச்சினார்க்கினியருரையும், ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை, ஐ.ப. 1956 பக். 41-42.
123. முருகு. 91-92
124. முருகு. 92-94
125. ,, 94-96
126. ,, 96-98
127. ,, 98-100
128. ,, 100-102
129. ,, 107-108
130. ,, 109-110
131. ,, 110-111
132. ,, 111-113
133. ,, 113-115
134. ,, 115-117
135. ,, 7-11
136. முருகு. 122, 210-211, 310
137. முருகு. 247
138. முருகு. 38, 210-211, 227
139. மா. இராசமாணிக்கனார், பத்துப் பாட்டாராய்ச்சி சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, மு. ப. 1970 ப. 221.
140. ..........................அகநானூறு
பாகனேரி, த. வை. இளைஞர் சங்க வெளியீடு, கழகம், சென்னை-1. 1968 பா. 149
141. ,, ,, பா. 59
142. முருகு 70-77
143. அகநா. பா. 266, தொல். பொருள். களவு நூ. 23
144. உ. வே. சாமிநாரதையர், (பதி) புறநானூறு மூலமும் உரையும் உ. வே. சா. நூல் நிலையம், சென்னை-41. ஏ. ப. 1971. பா. 55
145. முருகு. 119-125
146. அகம். பா. 1, 61.

147. மா. இராசமாணிக்கனார், மு. நூ. 5. 223
148. முருகு. 125-159
149. முருகு. 177-189
150. ,, 223-227
151. ,, 95-96
152. ,, 186-187
153. ,, 228
154. ,, 227-244
155. மா. இராசமாணிக்கனார். மு-நூ., ப. 584
156. தொல். பொருள். புறத். நூ. 5
157. மதுரை. 610-616
158. பட்டினப். 154-158
159. குறிஞ்சி. 172-175
160. முருகு. 254-255
161. சு. அ. இராமசாமிப் புலவர், மே. வி. க. அ., பகுதி 2. பக். 693-694.
162. முருகு. 160-165
163. சிறுபாண். 172-173
164. ,, 210
165. முருகு. 45-46
166. ,, 59-61, 226-227, 275-276.
167. ,, 155-159
168. முருகு. 155
169. ,, 81, குறிஞ்சி. 164-165.
170. தொல். பொருள். அகத். நூ. 5
171. பட்டினப். 86-90
172. பட்டினப். 93
173. பெரும்பாண். 402-404
174. ......................பத்துப்பாட்டு மூலமும் உரையும் பொ. வே. சோமசுந்தரனார் உரை, கழகம், சென்னை-1 மறுபதிப்பு 1976. ப. 20.
175. பெரும்பாண். 52
176. மலைபடு. 357-60
177. பட்டினப். 159-160, நெடுநல். 43, மதுரை 578, 164.
178. நெடுநல். 43
179. மதுரை. 164
180. பட்டினப். 67-68
181. நெடுநல். 77
182. மதுரை. 14-15
183. மா. இராசமாணிக்கனார், மு. நூ. பக். 590-591
184. வெ. கேசவராஜ், நடுகல் வழிபாடு, சர்வோதய இலக்கியப் பண்ணை, 32/1 மேல வெளி வீதி, மதுரை-1 மு. ப. 1978, ப. 3

185. தொல். சொல். எச்ச. நூ. 19
186. பட்டினப். 79
187. மலைபடு. 389
188. தொல். பொருள்: புறத். நூ. 5
189. தொல். பொருள். நூ. 60

''காட்சி கால்கோள் நீர்படை நடுகல்
சீர்தரு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்
றிரு மூன்று வகையிற் கல்லொடு

190. மதுரை. 725-726
191. மலைபடு. 388-89
192. பட்டினப். 78-79
193. மலைபடு. 394-96
194. மலைபடு. 387-389
195. ,, 394-396
196. ,, 386-389
197. பட்டினப். 78-79
198. மலைபடு. 395-396
199. மலைபடு. 386-391
200. புறம். 356; 1-4, 359; 1-8, 62: 2-5, 369: 14-15, 370: 22-25
201. முருகு. 45-51
202. சிறுபாண்.196-197
203. மதுரை. 29-38
204. பட்டினப். 258-260; முருகு. 52-56 சிறுபாண். 198
205. மதுரை. 161-163
206. மதுரை. 24-28
207 மதுரை. 631-633
208. பட்டினப். 259-260
209. சு. வித்தியானந்தன், மு. நூ., ப. 188
210. முருகு. 228
211. நெடுநல் 86
212. மதுரை. 354
213. மலைபடு. 64-66
214. மலைபடு. 446-448
215. முல்லை. 9-10
216 பொருநர் 183-184
217. குறிஞ்சி.
218 முருகு 167-168
219. குறிஞ்சி. 255
220. நெடுநல். 86, மதுரை. 353-355
221. நெடுநல். 43-45
222. மதுரை. 456-460
223. இராம. பெரியகருப்பன், குறிஞ்சிப்பாட்டு இலக்கியத் திறனாய்வு விளக்கம், மீனாட்சி புத்தக நிலையம்,

60, மேலைக் கோபுரத் தெரு, மதுரை. 1978 பக்.93-94

224. குறிஞ்சி 209-211

225. முருகு. 243

226. மதுரை. 525-526

227. தா. ஏ. ஞானமூர்த்தி, சமணம், தேவசேனாபதி (பொ. ப. அ ) மெய்யுணர்வு மேந்நிலைக் கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை. 1977. ப. 25

228. எட்வர்ட் ரமணி, சமயங்கள் ஓர் அறிமுகம், கிறித்துவ இறையியல் நூலோர் குழு, அரசரடி, மதுரை. 10 மு. ப. 1982 ப. 62

229. சீவக. பா. 2778-2786

230. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும் பகுதி-1 கழகம், சென்னை 1980 பக். 114-115

231. மதுரை. 479-480

232. மதுரை. 481

233. பட்டினப். 194-199

234. மதுரை. 475-476

235. மதுரை. 477-478

236. மதுரை 80

237. பெரும்பாண். 410-411

238. பட்டினப். 52-53

239. மதுரை. 484-485

240. மதுரை. 461-467

# இளம்பெரு வழுதியார் கண்ட இருங்குன்றம்.

'மதில் சூழ் சோலைக் கரசே' எனத் திருமாலிருஞ்சோலை மலையில் குடிகொண்டிருக்கும் திருமாலைப் பாடிப் பரவுவார் பெரியாழ்வார். இம்மலையை இளம்பெரு வழுதியார் பரிபாடலில் பதினைந்தாம் பாடலுள் சீரும் சிறப்பும் பெற விளக்கியுள்ளார்.

## *பெயர்க் காரணம்*

'திருமாலிருஞ் சோலை' என்பது அழகர் வீற்றிருக்கும் பதியாகும். மால், குன்றம் எனும் இரு சொற்கள் வருகின்ற போது முன்னால் நின்ற சொல் திருவொடும் பின்னால் நின்ற குன்றம் எனும் சொல் சோலையொடும் நிரலே தொடர்ந்த பெயராகும். ஆகவே இது திருமால் சோலைக் குன்றம் எனவரும். ஆனால், அவ்வாறு வழங்கும் வழக்கம் இல்லாது, இந்நாளில் திருமாலிருஞ்சோலை மலை என்றே வழங்குகின்றனர். இதனை,

> " ... ... ... திருவிற்
> சோலையொடு தொடர்மொழி, மாலிருங் குன்றம்"

எனும் அடிகள் விளக்கும்.

## *சிறப்புப் பெயர்கள்*

திருமாலிருஞ் சோலை மலைக்கு அலங்காரன் மலை, அழகர்க்கோயில், இருங்குன்றம், குலமலை, குளிர்மாமலை, கொற்றமலை, கோல்மலை, சிங்காத்திரி, சீர்பதி, சோலை மலை, திருமலை, திருமால் குன்றம், தென் திருப்பதி,

நில மலை, நீண்ட மலை, பழமுதிர்ச் சோலை, மாலிருங் குன்றம், வனகிரி முதலிய சிறப்புப் பெயர்கள் உண்டு.

### மலையின் சிறப்பு

அறிவெல்லையால் அறியப்படாத புகழுடன் சிறந்து நிலத்தைத் தாங்கும் சக்கரவாளம் முதலாகத் தொல்லிசைப் புலவர் ஆராய்ந்து கொண்டாடிய மலைகளுள் சிறப்பு வகையால் மட்டுமன்றிப் பொது வகையால் கூறுவதற்குரிய மலைகள் பல உள. அப்பல வற்றுள்ளும் இந்நிலவுலகத்துள்ள மக்களுடைய பசிவெம்மையைப் போக்குவதைக் குறிக்கோளா கவும் நிறைந்தபயனுடையதாகவும் விளங்கும்மலைகள்சிலவே யாகும். பொதுவாக மலையினைச் சுற்றிக் கனிமரங்கள் பல இருப்பதைக் காணலாம். இவை அம்மலையைக் காண வருவோரின் பசி தீர்க்கும் மருந்தாகப் பயன்படுகின்றன. அத்தகு பயன் நல்கவல்ல சிலவற்றுள்ளும் மலரையுடைய தடங்களுடனே மேகங்கள் படியும் சிகரங்களையுடைய குல மலைகள் சிலவே சிறப்புடையனவாகும், அவற்றுள்

> ''... ... கல்லறை கடலுங் கானலும் போலவும்
> புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
> எல்லாம் வேறுவே றுருவின் ஒருதொழில் இருவர்த்
> தாங்கு நீணிலை யோங்கிருங் குன்றம்''

சிறந்தது எனலாம். ஈண்டு, கண்ணன் கருநிறம் உடையவ னாகவும் பலராமன் வெண்மை நிறம் உடையவனாகவும் விளங்குகிறான் ஒரு தொழில் என்பதால் இருவரும் துவாரகா பதியை ஆண்ட காலத்தில் மக்களைக் காத்தல் தொழில் மேற்கொண்டதால் இவர்களை ஒரு தொழில் இருவர் என்று கூறுகிறார் வழுதியார்

அச்சோலை மலையின் சுனைகளெல்லாம் நீலமலர் மலர்தலானும், சுனையைச் சுற்றி அசோகு மரத்தின்

கிளைகள் எல்லாம் மலர்தலானும் ஆண்டுள்ள காய்களும் கனிகளும் நிறம் மாறுபட வேங்கை மலர்தலானும் மாயோனை அது ஒக்கும் மலையின் தொலைதூரக் காட்சி கருமையாக இருப்பதால் அது மாயோனின் உடல்போன்றும் பூக்கள் சிறப்பாக இருப்பதால் அவை திருக் கண்களாகவும், திருக் கைகளாகவும் காட்சியளித்தன எனக் கொள்ள இடமுண்டு. மேலும் நீலமலரைச் சூழ்ந்த அசோக மலர் மாயோன் அணிந்துள்ள பொன்னாடைக்கு உவமையாகவும் மலையின் மேல் காயும் கனியும் மாறுபட மலர்ந்த வேங்கை அவன் மணிகள் வைத்திழைந்த பொன்முடிக்கு உவமை எனவும் கூறலாம்.

இருமாலிருஞ் சோலையில் எழும் ஓசைகள் எண்ணற்றன. குட்டியாலே தழுவப்பெற்ற குரங்கு ஒரு சிகரத்திலிருந்து மற்றொரு சிகரத்திற்குத் தாவா நிற்பவும், குயில்கள் குருக்கத்தியின் இலைகள் உதிரும்படி அதன்கண் புகுந்திருந்து கூவா நிற்பவும் முழவிடத்தே எழுகின்ற எதிரொலி என்றும் ஒழியாது முழங்கவும் அமையும். இங்கு மயில் அகவ, குயில் கூவ, பாண்டில் இயம்ப எனச் சொற்பெய்தத் திறமை புலவரின் புலமையைப் புலப்படுத்துகின்றது. இவ்வாறு மாலிருஞ் சோலை மலைக் குன்றம் பெற்றியுடன் விளங்குவதைக் காணலாம்.

## இறைவன்

இப்பாடலில் கண்ணன், பலராமன் ஆகிய இருகடவுளரைப் பற்றிய குறிப்புகள் வருகின்றன

பலராமன் ஆதிசேடன் அவதாரமாகும். அம்மலையில் வீழ்கின்ற அருவிநீர் பலராமன் மார்பில் அணிந்துள்ள வெண்கடப்ப மாலை போன்றுள்ளது, அருவிநீர் சிலம்பாற்றில் சேர்வதால் அழகு பெறுகிறது. அதுபோல் மாலை

பலராமன் மார்பில் விளங்குவதால் அழகுபெறுகிறது. வேதம் பலராமனை,

''ஒள்ளொளியவை ஒரு குழையவை
வள்ளணி வளை நாஞ்சிலவை
சலம்புரி தண் டேந்தினவை''

என வருணிக்கிறது.

கண்ணன் திருமாலின் அவதாரமாகும். கண்ணனுக்கு 'நாறு இணர்த் துழாயோன், பொன்புனை உடுக்கையோன், மாயோன், மயர் அறுக்கும் காமக்கடவுள், கண்ணன்' முதலிய பெயர்களைச் சூட்டி அழைக்கின்றார் இளம்பெரு வழுதியார். இவ்வுலகப் பந்தமாகிய அசித்தை விலக்கி, சித்து வீடுபெற வேண்டுமெனின் அதற்கு எம்பெருமானைப் பற்றுதலே சிறந்த உபாயமாகும், 'நீ என்னைப் பற்று நான் உனக்கு மோட்சத்தைத் தருகிறேன்' எனக் கண்ணபிரான் சரம சுலோகத்தில் அருளிச் செய்கிறார். வழுதியாரும்,

''நாறிணர்த் துழாயோ னல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்''

என்கிறார். வேதம் கண்ணனை,

''கள்ளணி பசுந்துளவினவை கருங்குன்றனையவை
புல்லணி பொலங் கொடியவை
வலம்புரி நேமியவை
வரிசிலை வயவம்பினவை''

எனப் புகழா நிற்கும்.

கண்ணனின் உந்தியும் கண்ணும் தாமரையை ஒக்கும். மேகம், இருள், நீலமணி முதலியன போன்று கருநிறம்

உடையவன். அவன் அவ்வப்போது தனக்குப் பக்தி செய்யும் அடியார்களைத் தீயோர் பிடியிலிருந்து காக்கவும்; தீயோர்களை அழிக்கவும் பிறக்கிறான்.

> ''எவ்வயின் உலகத்துத் தோன்றி அவ்வயின்
> மன்பது மறுக்கத் துன்பங் களைவோன்''

என்பதே அப்பாடல் அடிகள்.

### வழிபடும் நெறிகள்

இளம்பெருவழுதியார் பக்தர்களுக்கும் பாமரர்களுக்கும் அறிவுரை வழங்குபவராகவும், வழிபடு நெறியைப் புலப் படுத்துபவராகவும் விளங்குகிறார்.

ஏ! அடியவர்களே! இருங்குன்று எனப்பெறும் திருமாலிருஞ் சோலைமலை என்னும்பெயர்பரவியஅம்மலை மிகப்பழையது; மிக்க புகழுடையது. அம்மலையே, தன்னைக் கண்ட அளவானே காண்பார்தம் பிறப்பிற்குக் காரணமான மயக் கத்தைத் தீர்த்து வீடுபேறு நல்கும் இயல்புடையது. ஆகவே, அம்மலைக்கண் உரையும் இறைவனிடம் சென்று தொழ நேரமோ பொருள் வலியோ இல்லாதவர்களே, நீங்கள் உங்கள்இடத்திலிருந்து நெடுந்தொலைவில் உம்கண்ணிற்குப் புலப்படும் அம்மலையையாயினும் தொழுங்கள்

> ''சென்று தொழு கல்லீர் கண்டுபணி மின்மே
> இருங்குன் றென்னும் பெயர்பரந் ததுவே
> பெருங்கலி ஞாலத்துத் தொன்றியல் புகழது
> கண்டுமயர் அறுக்கும் காமக்கடவுள்''

நீங்கள் மட்டுமன்றி நும் மனைவி, நுமையீன்றஇருமுதுக் குரவர்; குழவிகள், நும்பால் அன்புடைய சுற்றம் ஆகிய

யாவரும் இன்புற அம்மலையினைத் தெய்வமாக மதித்து, அம்மலை இருக்கும் திசை நோக்கி வணங்குங்கள் என்கிறார்.

சிலர், மலையில் உறையும் தெய்வத்தை வணங்கவேண்டு மென்பதில்லை. அம்மலையை வணங்கினால் கூடப் போதும் என்பர். நம்மாழ்வாரும்,

''திருமால் இருஞ் சோலைமலை என்றேன் என்னைத்
திருமால் வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான்''

எனக் கூறுகின்றார்.



# ஆய்ச்சியர் குரவையில் அவதார மகிமை

'அவதாரம்' என்ற செல்லுக்கு 'இறங்குதல்' என்று பொருள். உயர்ந்த நிலையிலிருந்து தாழ்ந்த நிலைக்கு வருதல் என்றும் பொருள் கொள்ளலாம். நல்லோரைக் காக்கவும் பொல்லாரை அறவே ஒழிக்கவும் அறத்தை நன்கு நிலை நிறுத்தவும் இறைவனது அவதாரம் நிகழ்கிறது. காலத்தின் இயல்பிற்கும் மனிதனுடைய போக்கிற்கும் ஏற்றவாறு புதிய அறநெறிகளைக் காட்டி மக்களைப் பரம்பொருளிடம் சேர்த்தல் அவதாரத்தின் நோக்கமாகும்.

இந்து சமயத்தில் முப்பெருங் கடவுளருள் காத்தற் கடவுளாக விளங்கும் திருமால் உயிர்கள் இவ்வுலகத் துன்பத் தினின்று உய்வதற்காகப் பல அவதாரங்கள் எடுத்துள்ளார். உலகத்திலே எவ்வப்பொழுது அறம் தேய்ந்து அல்லன பெருகுகின்றனவோ அப்பொழுதெல்லாம் தன்னைத்தானே இறைவன் படைத்துக் கொள்கிறான். இதனை,

''பரித்ராணய ஸாதூனாம் வினாசாய சதுஷ்க்ருதாம்
தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே''

எனக் கீதை கூறும்.

'நல்லோரைக் காக்கவும் அல்லோரைக் கரந்தொடுக்குவதற்கும், தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் நான் அவதரிக்கிறேன்.' என்பது அதன் பொருள்.

களை தலைநிமிர்ந்து, வளர்ந்து பயிர்களை அழிப்பது போன்று நல்லவர்களுக்கிடையே தீயோர்கள் தோன்றி

பெருந்துன்பம் விளைவிக்கின்றனர். உலகில் தீயவர்களுடைய கூட்டம் பெருகிவிட்டால் அவர்களிடையே தர்மம் நிலைக்காது; மாறாக அதர்மமே நிலைக்கும். எனவே, போர், கொள்ளைநோய், வறுமை, பஞ்சம் இவை வாயிலாகப் பகவான் அவர்களுக்குத் துன்பத்தை யூட்டுகிறார். துன்பம் ஒன்றே மக்களைச் சீர்த்திருத்துவதற்குச் சிறந்த வழியாகும். மரணத்தின் வாயிலாக அவர்களில் பெரும்பான்மையோரை ஒதுக்கித் தள்ளுதலும் அவசியமாகிறது.

குணங்கள் மூன்று வகைப்படும். அவை இராஜசம், தாமசம், சத்துவம் என்பன. இவற்றுள் இராஜச குணமும், தாமச குணமும் அதிகரிக்கப்பெறும் போது மக்கள் அதர்மத்தில் ஈடுபடுகின்றனர்; அப்போது துன்பம் பெருகுகின்றது. ஆதலால் அவர்களுடைய தொகையைக் குறைத்தல் வேண்டும். சத்துவ குணத்தில் இருப்பவர்களை ஓம்புதல் அடுத்தபடி நிகழ்கின்றது. இங்ஙனம் இம்முக்குணங்களுக்கிடையில் தாரதம்மியம் ஓரளவு சமப்படுவதாகிறது. இதைத் தான் அவதார புருஷர் செய்து வைக்கின்றனர். அவதார புருஷர் வேறு; திருமால் அவதாரம் வேறு.

அவதார புருஷர் ஈசுவரனால் அனுப்பப்படும் மனுஷ்ய தூதர் ஆவார். அவர் பெரிய சக்கரவர்த்தியின் பிரதிநிதி போன்றவர். தொலைதூரத்தில் நடக்கும் கலவரங்களை அடக்கச் சக்கரவர்த்தி செல்ல இயலாதாகையால் தன் பிரதிநிதியை அனுப்பி அமைதியை நிலைநாட்டுவது போன்று எங்கு தர்மம் தாழ்ந்து அதர்மம் ஓங்குகின்றதோ அங்கு இறைவன் தன் அவதார புருஷனை அனுப்பித் தர்மத்தை நிலைநிறுத்துகின்றார்.

திருமால் அவதாரங்களுள் பத்தே மிகச்சிறந்ததும் யாவரும் போற்றக் கூடியதுமாகும். அதைத் தசவதாரம் என்பர். பெரியாழ்வார் அவற்றை,

''தேவுடைய மீனமாய் ஆமையாய்
ஏனமாய் அரியாய் குறளாய்
மூவுருவில் இராமனாய் கண்ணனாய்
கற்கியாய் முடிப்பான் கோயில்''

எனக் கூறுகின்றார்.

இப்பத்து அவதாரங்களும் மனிதப் பரிணாம வளர்ச்சியை விளக்குவனவாய் அமைந்து விளங்குவதாகவும் அறிஞர் கூறுவர். முதலாவது படிநிலையினைத் தாழ்ந்த பிறப்புக் களான மீன், ஆமை, பன்றி முதலியவை விளக்குகின்றன். இரண்டாவது படிநிலையினை விலங்கு முகமும் மனித உருவ மும் கலந்த நரசிங்க அவதாரம் விளக்குகின்றது. மூன்றாவது நிலையினை மனித அம்சத்தோடு பிறந்து பழிவாங்கும் கொடிய குணமுடைய அவதாரமாகப் பரசுராம அவதாரம் விளங்குகின்றது. அடுத்தது தூய நற்பண்புகளின் உறைவிட மாக இராமவதாரம் விளங்குகின்றது. விருப்பு வெறுப்பு இல்லாது தர்மத்தை நிலைநாட்ட அதர்மத்தை அழிப்பதே கிருஷ்ணவதாரமாகவும், ஒருங்கின்மையை வெட்டி வீழ்த்தும் வாளொடு தோன்றும் அவதாரமாகக் கல்கி அவதாரமும் விளங்குகின்றன. மனிதத் தன்மை வாயிலாகத் தெய்வாம்சம் வெளிப்படும் சிறப்பினை அவதாரங்களால் அறியமுடிகின்றது. இந்த அவதாங்களுள் வாமன அவதாரமும் இராம அவதார மும் கிருஷ்ண அவதாரமும் நரசிங்க அவதாரமும் சிலப்பதி காரத்தில் சிறப்பாகப் பாடப்பெறுகின்றன.

சிலப்பதிகாரத்தில் பதினேழாவது காதையாக அமைவது ஆய்ச்சியர் குரவையாகும். இளங்கோவடிகள் திருமாலின் புகழை, தெய்வத் தன்மையை விளக்குவதற்காகவே இக் காதையை அமைத்தாரெனில் அது மிகையாகாது. இதில் திருமால் குறித்துப் பல கருத்துக்கள் கூறப்பெற்று இருந்தா- லும் அவதார மகிமை பற்றியே மிகச் சிறப்பாகச் சொல்லப் பெற்றுள்ளது.

## மூவுலகும் ஈரடியான் அளந்தோன்

பிரகலாதன் பேரன் மாபலிச் சக்கரவர்த்தி ஆவான் சிறந்த விஷ்ணு பக்தன், பிரம்மாவை நோக்கித் தவம் புரிந்து வரங்கள் பெற்ற அகங்காரத்தினால் தேவேந்திரனை அவன் பதவியிலிருந்து துரத்திவிட்டுத் தேவர்களுக்குத் தலைவனாக விளங்னான்.

இதையறிந்த தேவேந்திரனின் தந்தை காசிபர் திருமாலை நோக்கித்தவஞ்செய்ய, திருமால் 'அதிதி கற்பத்தில் தோன்றி இந்திரனுக்கு மீண்டும் அருள் செய்கிறேன்' என்று கூறினார். அதன்படி சிறிது காலத்திற்குப்பின் அதிதியின் வயிற்றில் மகாவிஷ்ணு தோன்றினார். உபேந்திரன் எனும் பெயரில் வளர்ந்து வரலானார். வாமன் குறுகிய வடிவம் உடையவர் அதனால் குறளன் என்றொரு பெயரும் உண்டு.

மாபலிச் சக்கரவர்த்தி ஒருமுறை விஷ்ணுவைக் குறித்து யாகம் செய்த காலத்தில் வாமனர் அங்குச் சென்று தான் தனித்து யாகம் செய்ய மூன்றடி மண்கேட்டு வேண்டினார். பலிச்சக்கரவர்த்தி தன் குரு சொல்லையும் மீறி தானம் வழங்கினார். உடனே வாமனர் விண்ணை ஓரடியாலும் மண்ணை இன்னோரடியாலும் அளந்து எஞ்சிய ஓரடியைப் பலியின் தலையிலும் வைத்து அளந்து கொண்டார். இதனை இளங்கோ,

''... ... ... ... கொண்ட சீர்
வைய மளந்தான்றன்'' (17:16. 2-3)

என்றும்

''இரண்டடியான் மூவுலகு மிருடீர நடந்தனையே''
(17:34.2)

என்றும்

''மூவுலகு மீரடியான் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்ப...''       (17:35.1-2)

என்று விளக்குகின்றார்.

## *தம்பியொடுங் கான் போந்தோன்*

அயோத்தி நகரத்தில் சூரிய வம்சத்தில் உதித்தவன் தசரதன். அவன் பிள்ளை இல்லாக் குறையால் யாகம் செய்தான். இஃது இங்ஙனமிருக்க, இராவணன் எனும் அசுரனின் தொல்லைகளைத் தாங்கவியலாத தேவர்கள் மகா விஷ்ணுவிடம் முறையிட திருமால் அவர்களுக்கு ஆறுதல் கூறி 'அயோத்தியில் தசரதனுக்கு மைந்தனாகப் பிறந்து இராவணனை அழிப்பேன்' என்று கூறினார். பின்னர், தேவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காக்க ஸ்ரீமந்நாராயணன் கௌசல்யையின் மகனாகப் பிறந்தனன்.

இவ்வாறு பிறந்து வளர்ந்த இராமன் கைகேயின் சூழ்ச்சியால் நாட்டை விட்டுக் காட்டிற்குச் சென்றான். அப்போது சீதையை இழந்து தம்பியின் துணைக்கொண்டு இராவணனை அழித்து மீண்டான். இதனை அடிகள்,

''... ... ... ... ...தம்பி யொடுங் கான்போந்து
... ... ... தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன் ... ... ... ''       (17:35.2-4)

எனக் கூறுகின்றார்.

## *பஞ்சவர்க்குத் தூது நடந்தோன்*

திருமால் தேவகியின் மணிவயிற்றில் எட்டாவது பிள்ளையாகப் பிறந்து ஆயர்பாடியில் அசோதை வீட்டில் கண்ணன்

எனும் பெயர்தாங்கி வளர்ந்து வந்தான். இவ்வவதாரமும் கம்சன் எனும் கொடியவனை அழிக்கத் திருமால் அவதரித்ததையே விளக்குவதாக அமைந்துள்ளது.

கண்ணன் பிள்ளைப் பருவத்தில் வெண்ணெய் திருடி உண்டான் (17:33.3). அதைக் கண்ட யசோதை அவனைக் கயிற்றால் கட்ட முயன்றாள்; முடியவில்லை. பின்னர் கண்ணன் வயிற்றைச் சுருக்கிக் கொள்ளவே கட்டினாள் (17:32.3) பசுக்களை மேய்த்த காலத்தில் குருந்தொசித்தான் (17:29.4) குழல் ஊதி விளையாடினான்; இதனை அடிகள் 'கொன்றையந் தீங்குழல் கேளாமோ!' 'ஆம்பலந் தீங்குழல் கேளாமோ!' 'முல்லையந் தீங்குழல் கேளாமோ' எனக் கூறுகின்றார்.

கௌரவர் நூற்றுவர்பால் பாண்டவர் பொருட்டுத் தர்மத்தை நிலைநிறுத்தக் கண்ணன் தூது சென்றான். இதனை இளங்கோ,

''... ... நூற்றுவர்பா னாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ... ... ... '' (17:37.2-4)

என்றும்,

''... ... ... பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி''
(17:34.3)

என்றும் பாடிப் பரவுகின்றார்.

மேலும் அருச்சுணன் சபதம் நிறைவேறுதற் பொருட்டு கதிரைத் திகிரியால் மறைத்தான். (17:26.1) உலகை உண்டு ஆலிலை மேல் துயின்றனன். (17:33.2) முதலிய கண்ணன் திருவிளையாடல்கள் பல ஆய்ச்சியர் குரவையில் வருகின்றன.

## இரணியனை அழித்தோன்

இரணியன், இரணியாட்சகனின் சகோதரன். அவன் பிரம்மாவை நோக்கி தவஞ்செய்து சாகா வரம் பெற்றான். பின்னர் திருமால் பக்தனாகிய பிரகலாதனை இரணியன் துன்புறுத்தலைக் கண்டு, வெகுண்டு நரசிங்கமாய் தூணிற் தோன்றி அந்தி வேளையில் இரணியனைக் கொன்றார்,

''மடங்கலாய் மாரட்டாய் மாயயோ மருட்கைத்தே''
(17:34.4)

என்பதே அப்பாடல் வரி. இதில் 'மடங்கள்' என்பது சிங்க உருவமாகிய நரசிங்கத்தையும் 'மாறட்டாய்' என்பது அவன் பகைவனான இரணியனைக் குறிக்கும். இவையே திருமால் அவதாரம் குறித்து வருகின்ற செய்திகளாகும்.

இவற்றைத் தவிர துறக்கத்தில் இருந்த அமுதம் முதலிய உயர்ந்த பொருட்களை யெல்லாம் கடலில் புகுமாறு தூருவாச முனிவர் சாபமிட்டார். அப்பொருள்களும் அவ்வாறே புகுந்தன. தேவர்கள் அப்பொருள்களைப் பெற எண்ணினர். தேவர்களும் அசுரர்களும் ஒன்றாகத் திரண்டு பாற்கடலைக் கடைந்தனர்.

''பாம்பு கயிறாக் கடல் கடைந்த மாயவன்'' (17:20.1)

''வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கி
கடல் வண்ணன் பண்டொருநாட் கடல்வயிறு
கலைக்கினையே'' (17:32.1-6)

இவ்வாறு தீயோரை அழிக்க இறவன் எடுத்த அவதாரங் களைச் சிலம்பு செவ்வனவே செப்புவதைக் காணலாம்.

திருமால் சீர் கேளாத செவியென்ன செவியே!
நாராய ணாவென்ன நாவென்ன நாவே!!

# இராமவதாரம்

திருமால் எடுத்த அவதாரங்கள் எண்ணற்றன. அவற்றுள் சிறப்புடன் போற்றப் பெறுவது மீனம், ஆமை ஏனம், அரி. குறளன், இராமன், பரசுராமன், பலராமன், கண்ணன், கல்கி ஆகிய பத்து அவதாரங்களாகும். அவற்றுள்ளும் மிகச்சிறப் புடையது இராமவதாரம் ஆகும். ஏனெனில் அலகிலா விளை யாட்டுடைய திருமால் இப்பூவுலகில் மானுடனாக அவதரித்து மானுட இயல்புகளுக்கேற்ப இன்பதுன்பங்களை அனுபவித்த-தால் இராமவதாரம் சிறப்புப் பெற்றது எனலாம்.

தருமம், அதருமம் என உலகில் இரண்டு உண்டு. தருமத் திற்கும் அதருமத்திற்கும் உருவம் கிடையாது. இனிப்பைக் கரும்பின் மூலம் அறிதல் போல் தருமத்தை நல்லவர்கள் மூலமும் கசப்பைப் பாகற்காயின் மூலம் அறிதல் போல் அதருமத்தைத் தீயவர்கள் மூலமும் அறியலாம். இவ்விரு நிலைகளில் தருமம் குன்றி அதருமம் பெருகுகின்ற போது திருமால் தன்னிலையிலிருந்து இறங்கி வந்து அல்லோர்களை அழித்து நல்லோர்களைக் காப்பர். தேவர்களாகிய நல்லோரைக் காக்க திருமால் இராமவதாரம் எடுத்தார், ஈண்டு கம்பராமாயணம் வழிநின்று இராமவதாரம் விளக்கப் பெறுகிறது.

அயோத்தி மன்னன் தசரதன் நீண்ட காலமாகப் பிள்ளைப்பேறு இன்றி இருந்தான். இதை எவரிடம் உரைத்துப் பரிகாரம் தேடிக்கொள்வது எனக் காத்திருந்தான். ஒருபோது வசிட்டரிடம்,

"... ... ... யெற்பின் வையக
மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ" (திரு.3.)

என உரைத்தான். அதாவது எனக்குப் பின் பூலோகம் காப்ப வரின்மையாற் மனக்கலக்கம் அடைகிறேன் என்றான். இவ்வுலகிலுள்ள தந்தைமார்கள் தனக்குப்பின் தன் சொத்தைப் பெறுதல் முதலிய காரணங்களுக்காக மகனைப் பெற எண்ணுவர். ஆனால் இச்சக்கரவர்த்தியோ உலகயுயிர்களைக் காத்தல் வேண்டி மகன் வேண்டி நின்றார்.

இவ்வாறு தசரதன் உரைகேட்ட வசிட்ட முனிவர்,

''அலைகட னடுவனோ ரனந்தன் மீமிசை
மலையென விழிதுயில் வளரு மாமுகில்
கொலைதொழி லரக்கர்தங் கொடுமை ...

தீர்க்க வல்லவன் எனக் கருதினார். அப்பொழுது, தசரதனுக்கு மைந்தனாகப் பிறந்து தேவர்களைக் காப்பேன் எனத் திருமால் கூறிய வார்த்தைகள் நினைவிற் தோன்றின.

வரங்கொடுத்தல் எளிமை. அதனைப் பெறுவோர் அறநெறியிற் நின்று பயன்படுத்துதல் அருமை. இதற்குக்காட்டாக இரணியன், இராவணன் முதலியோரைக் கூறலாம். காளிதாசன் இயற்றிய குமாரசம்பவத்தில், தாரகாசூரனை அழிக்க வேண்டுமென பிரம்மனைத் தேவர்கள் வேண்டுகின்றனர். அதற்குப் பிரம்மன், ''விஷ்வ்ருக்ஷேபி சம்வாத்ய ஸ்ருயம் மசாம்ப்ரதம்'' என்கிறான். அதாவது, ஒருவன் தன்னால் வளர்க்கப்பட்ட மரம் விஷத் தன்மையுடைத்து என அறிந்தாலும் அதனைத் தானே வெட்ட மாட்டான் என்பது அதன் பொருளாகும். கம்பராமாயணத்தில் சிவன், பிரம்மனோடும் தேவர்களோடும் சென்று திருமாலிடம் தேவர்களின் குறைதீர்க்க வேண்டும்போது,

''எங்கணீள் வரங்களா லரக்க ரென்றுளார்
பொங்குமூ வுலகையும் படைத்த ழித்தனர்.'' (திரு.18)

எனக் கூறினன். இதிலிருந்து வரங்கொடுத்தவரே வரம் பெற்றவரை அழித்தல் தருமமன்று என்பது தெரிகிறது. அதனால் காத்தல் கடவுளாகிய நீ அவதாரம் எடுத்து மூவுலக மக்களைக் காத்தருள் செய்தல் வேண்டும் எனக்குறிப்பால் திருமாலுக்குச்சிவன் உணர்த்தினன். அதைக் கேட்டதிருமால்,

''வானுளோ ரனைவரும் வான ரங்களாக்
கானினும் வரையினுங் கடித டத்தினுஞ்
சேனையோ டவதரித் திடுமின்'' (திரு. 20)

எனக் கூறினான். பின்னர், 'நான், யானை தேர் குதிரைப் படைகளைக் கொண்டிலங்கும் அரசனான தசரதனுக்குப் புதல்வனாய் பிறப்பேன். மாயத் தன்மையை உடைய அரக்கர்களின் வரங்களையும் வாழ்வையும் அம்புகளால் பொடிப் படுத்துவேன். அதோடு மட்டுமின்றிச் சங்கும் சக்கரமும் ஆதிசேடனும் எனக்குத் தம்பியர்களாக அயோத்தியில் தோன்றுவர்' என்றனன்.

''மசரத மனையவர் வரமும் வாழ்வுமோர்
நிசரத கணைகளா னீறு செய்யாயாங்
கசரத துரகபாக் கடல்கொள் காவலன்
றசரதன் மதலையாய் வருதுந் தாரணி
வளையொடு திகிரியும் வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலு
மிளைஞர்க ளென்வடி பரவ வேகிநாம்
வளைமதி லயோத்தியில் வருது மென்றனன்''
(திரு. 21-22)

இவ்வாறு முன்னர்த் திருமால் தேவர்களுக்கு அளித்த உறுதி மொழியை எண்ணிய வசிட்டர், 'தேவர்களின் குறை தீர்ந்தால் தசரதன் குறைதீரும்; தசரதன் குறை தீர்ந்தால் தேவர்கள் குறைதீரும்' என எண்ணினார். தசரதனை நோக்கி

''நீ வேள்வி செய்தால் திருமால் உனக்கு மகனாகத் தோன்றுவன்' என்று கூறினார். தசரதன் வேள்வி செய்ய ஓமக்கினியிலிருந்து பூதமொன்று பிண்டத்தை ஏந்தி எழுந்து, அதைத் தரைமீது வைத்துவிட்டு மறைந்தது. முனிவர் பிண்டத்தை முறைப்படி மனைவியர்க்குப் பகிர்ந்தளிக்குமாறு தசரதனிடம் கூறினார்.

மாமுனிவர் சொற்படி தயரதன் பிண்டத்தை இரு பாகமாக்கி ஒரு பாகத்தைக் கௌசலைக்குக் கொடுத்தான். மற்றொரு பாகத்தை இரண்டாக்கி ஒரு பாகத்தைக் கைகேயிக்கும் மற்றொருபாகத்தைச் சுமித்திரைக்கும் கொடுத்தான். மேலும் பகிர்ந்த போது சிந்திவிழுந்த பிண்டங்களைப் பின்னும் சுமித்திரைக்குக் கொடுத்தான்

பிண்டத்தைக் கௌசலைக்குக் கொடுத்த போது, ''சங்கமார்த்தெழ'' என்றும் கைகேயிக்குக் கொடுக்கும்போது, ''தேவ ரார்த்தெழ'' என்றும் சுமித்திரைக்கு முதலில் கொடுக்கும்போது ''சுரர்க்கு வேந்தினிச், சமித்ததென் பகையெனத் தமரோ டார்ப்பவே'' என்றும் மறுமுறை சுமித்திரைக்குக் கொடுத்தபோது ''மண் மன்னுயிர் தமக்கு நீள் வலமுந்துள்ளவே'' என்றும் மகிழ்ந்ததாகக் கம்பர் கூறுகின்றார். இவ்வாறு ஒவ்வொருவரும் மகிழப் பின்வரும் காரணங்களைக் கூறலாம்.

1. முதலில் கௌசலை பிண்டத்தைப் பெற்றபோது சங்க வாத்தியங்கள் மிகுந்து ஒலித்தன. சங்கம் ஒலித்தல் மங்கலத்திற்கு அறிகுறி. ஒருபுறம் நோக்கின் திருமால் உலகில் பிறக்கப் போவதால் மங்கலம் உண்டாகப் போவதாகவும் மறுபுறம் நோக்கின் அரக்கர்களை அழித்து அவர்களுக்குத் திருமால் தன் மங்கலம் பொருந்திய பாதத்தை அளிக்கப் போவதாகவும் கருதலாம்.

2. கைகேயி பிண்டத்தைப் பெற்றபோது தேவர்கள் ஆர்த்தெழுந்தனர். ஏனெனில், இனி நமக்கு அவ்வப்போது தொல்லை கொடுத்துவரும் இலங்கை அரக்கர்கள் அழியப் போகிறார்கள் எனக் கருதியாகும்.

3. சுமித்திரை முதலில் பிண்டத்தைப் பெற்றபோது இந்திரன் தன் இனத்தோடு களிப்படைத்தான். காரணம் இந்திரசித்துவைக் கொல்லப்போகிற இளைய பெருமாளின் திருவவதாரம் என எண்ணியதே.

4. சுமித்திரை இரண்டாம் முறை பிண்டத்தைப் பெற்ற போது உலகப் பிராணிகட்கு வலம் துடித்தது. ஏனெனில் இலவணன் முதலிய அரக்கர்களை அழிக்க, சத்ருக்கினன் பிறக்கப் போகிறான் என்பதனாலாகும்.

பிண்டத்தைப் பெற்ற மூவருக்கும் மகப்பேறு வாய்க்கும் காலம் வந்தது. ஒரு யுகத்தில் உலகங்களை எல்லாம் வயிற்றினுள் மறைத்தவனும் வேதத்தின் முடிவான பொருளானவனும் கருமுகில் போன்றவனுமானத் திருமால் புனர்பூச நட்சத்திரம் கடக லக்கினம் சேர்ந்த நல்லோரையில் கோசலையின் மணிவயிற்றில் பிறந்தனன்.

''ஒருபக லுகலெலா முதரத் துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை''

(திரு. 103)

பின்னர், பூச நட்சத்திரம் மீன லக்கினம் கூடிய நேரத்தில் கைகேயி பரதனைப் பெற்றனள். சுமித்திரை ஆயில்ய நட்சத்திரம் கடக லக்கினம் கூடின நேரத்தில் இலக்குவனனையும் மக நட்சத்திரம் சிம்ம லக்கினம் கூடிய நேரத்தில் சத்துருக்கினனையும் பெற்றனள்.

இவ்வாறு, திருமாலும் அவன் அம்சங்களான சங்கும் சக்கரமும் ஆதிசேடனும் அவதாரம் எடுத்ததைக் கண்ணுற்ற தேவர்கள் ''வீடினரரக்கரென் றுவக்கும் விம்மலா. ஓடி'' மகிழ்ந்தனர்.

இராமவதாரம் பற்றிக் கூறும்போது கம்பராமாயணத் திற்கும் வால்மீகி இராமாயணத்திற்கும் இடையே ஒரு சில வேறுபாடுகள் காணப்படுகின்றன் அவை பின்வருமாறு.

***கம்பராமாயணம்***

1. கம்பராமாயணத்தில் பிள்ளைப்பேறு இல்லாக் குறையை வசிட்டருக்குக் கூறி, அதற்குரிய வழி வகையையும் தசரதன் கேட்கிறான்.

***வால்மீகி இராமாயணம்***

தசரதன் தனக்குப் மகப்பேறு இல்லாக் குறையை எண்ணி 'தான் ஏன் தவஞ்செய்தல் கூடாது' என எண்ணினான். பின்னர், மந்திரச் சுற்றத்துடன் கலந்து ஆலோசித்து, தான் யாகஞ்செய்ய தீர்மானித்தப்பின், வசிட்டரிடம் கூறுகிறான்.

கம்பர் :

2. பூதம் வேள்வித் தீயிலிருந்து பொன்தட்டில் பிண்டத்தை ஏந்தித் தோன்றியது. பின்னர் முனிவர்முன் தரையில் வைத்து மறைந்தது.

வால்மீகி :

வேள்வித் தீயினின்று தேவமகன் தோன்றி, பொன்தட்டி லுள்ள பாயசத்தை மனைவியர்க்குப் பகிர்ந்து அளிக்குமாறு தசரதனிடம் கூறி மறைகிறது.

கம்பர்

3. தசரதன் பிண்டத்தை முதலில் இரண்டாகப் பிரித்து ஒரு பகுதியை கௌசலைக்குக் கொடுத்தான். மற்றொரு பகுதியை இரண்டாகப் பகுத்து ஒருபகுதியைக் கைகேயிக்கும் மற்றொருபகுதியைச் சுமித்திரைக்கும் கொடுத்தான். எஞ்சிய பிண்ட துகள்களை மறுமுறை சுமித்திரைக்குத் தசரதன் கொடுத்தான் எனக் கம்ராமாயணம் கூறுகிறது.

வால்மீகி :

தசரதன் பாயாசத்தை இரண்டாகப் பிரித்து ஒரு பாதியை கௌசலைக்கும் மற்ற பாதி பாகத்தில் ஒரு பகுதியைச் சுமித் திரைக்கும், மீதி இருந்த மூன்றாம் பாகத்தில் பாதியைக் கைகேயிக்கும் அதில் எஞ்சிநின்ற பகுதியை மறுமுறை யோசித்துச் சுமித்திரைக்கும் கொடுத்தான் என வால்மீகி இராமாயணம் கூறுகிறது.



# அழகனும் ஆடலும்

''அஞ்சு முகம் தோன்றின் ஆறுமுகம் தோன்றும்
வெஞ் சமரில், 'அஞ்சல்' என வேல் தோன்றும்; நெஞ்சில்
ஒருகால் நினைக்கின், இருகாலும் தோன்றும்
'முருகா!' என்று ஓதுவார் முன்'' (முருகு)

உலகில் தோன்றும் உயிரினங்களை ஆணவம், கன்மம், மாயை எனும் முப்பெரும் மலங்களிலிருந்து காத்தல் இறைவனது கடமையாகும். இந்து மதக் கடவுளருள் முருகன் இப்பணியை ஆற்றுவதில் தலையானவன். முருகன் எனும் சொல் மிகப் பழமையுடைத்து. நக்கீர தேவநாயனாரும், 'அரும்பெறல் மரபின் பெரும் பெயர் முருக' என்பர். முருகனுக்கு முருகன், குமரன், கார்த்திகேயன், கந்தன், சரவணபவன், ஆறுமுகன், குகன், விசாகன். வேலவன், குருநாதன், பழநி, வேளைக் காரன் முதலிய பெயர்களுண்டு.

*முருகன்*

முருகு எனும் சொற்கு இளமை, அழகு, மணம், கடவுட் டன்மை, தேன் முதலிய பொருள்களுண்டு 'முருகு' எனும் சொல்லுடன் 'அன்' எனும் ஆண்பால் விகுதி சேர்த்து 'முருகன்' என அழைக்கப் பெற்றது. முருகன் குன்றாத இளமையும் வற்றாத நறுமணமும் நிறைந்த தெய்வத் தன்மையையும் தெவிட்டாத இளமையும் உடையவன். 'முருகு' எனும் சொல்லில் 'உகரம்' ஊர்ந்து வந்துள்ளது. 'அகரம்' 'உகரம்' 'மகரம்' என்ற மூன்று எழுத்துக்களின் சேர்க்கையே ஓங்காரமாகும். 'அ' சிருஷ்டியையும் 'உ' ரக்ஷகத்தையும் 'ம' சம்ஹாரத்தையும் குறிக்கும். மேற்கூறிய மூன்றனுள் 'உ' கரத்திற்கு மட்டும் சிறந்த இரக்ஷிக்கும் பண்புண்டு. முருகன் உயிர்களைக் காத்தலால் இப்பெயர் பெற்றான்.

*குமரன்*

கு + மாரன். கு = அறியாமை, மாரன் = அழித்தல். அறியாமையை அழித்தலால் 'குமரன்' எனும் பெயர் வந்தது.

*கார்த்திகேயன்*

கார்த்திகைப் பெண்கள் கந்தனை வளர்த்ததால் கார்த்திகேயன் எனும் பெயர் வந்தது. அப்பெண்களுக்கு 'வாகுலை' என்ற பெயரும் உண்டு. அதனால் அவனுக்கு 'வாகுலேயன்' எனும் பெயரும் உண்டு.

*கந்தன்*

கந்து என்றால் 'இடை' 'நடு' என்று பொருள். சிவனுக்கும் உமைக்கும் நடுவில் இருப்பதால் கந்தன் எனப் பெயர் ஏற்பட்டது. ஸ்கந்தம் என்றால் 'தோள்' என்ற பொருளும் உண்டு. இதற்கு வலிமையுடையவன் என்று பொருள். கச்சியப்ப சிவாச்சாரியாரும்

''சேயவன் வடிவம் ஆறும் திரட்டி
நீ ஒன்றாய் செய்தாய்
ஆயதனாலே கந்தனாம்
எனும் நாமம் பெற்றான்''

என்பர்.

*சரவணபவன்*

'சரவணபவ' என்கிற ஆறு எழுத்துக்களை உடையவன் சரவணபவன் என்றால் நாணல் சூழ்ந்த பொய்கையில் தோன்றியவன். என்றும் பொருள்படும். ச—மங்கலம்,

ர—ஒளிகொண்ட, வ—சாத்துவீகம், ந—போர், பவன்—உதித்தவன் என்ற பொருளில் மங்கலம், ஒளிகொண்ட சாத்வீகம், வீரம் என்ற சிறப்பியல்புகளுடன் தோன்றியவன் எனலாம்.

மற்றும் ச—உண்மை, ர—விஷயநீக்கம், அ—நித்ய திருப்தி, ண—நிர் விடயமம், ப—பாவ நீக்கம், வ—ஆன்ம இயற்கை குணம் என்றும் கூறுவர்.

*ஆறுமுகன்*

திரு, புகழ், ஞானம், வைராக்கியம், வீரியம், ஐஸ்வரியம் என்றும் ஆறையும் குறிப்பனவாக ஆறுமுகங்கள் காட்சி தருகின்றன. இம்முகங்கள் ஆற்றும் பணிகளை அருணகிரி நாதர்,

''ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள் வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணப்புணர வந்தமுக மொன்றே
(திருப்புகழ்)

என விளக்குகிறார்.

*குகன்*

மனமாகிய குகையில் இருப்பவன். அடியார் மனமாகிய குகையில் வீற்றிருந்து மாயையை அறுத்து நல்லருள் வழங்குபவன்.

## விசாகன்

வி—பட்சி, சாகன்—சஞ்சரிப்பவன். மயிலை ஊர்தியாகக் கொண்டு எங்கும் சஞ்சரிக்கும் இயல்புடைத்தலால் விசாகன் எனப் பெயர் பெற்றான். செவ்வேளுக்கு ஊர்தியாகவும் கொடியாகவும் விளங்குவன மயிலும் கோழியும் ஆகும். இவை இறைவன் உயிர்களிடம் காட்டும் ஒப்பற்றக் கருணையைக் குறிக்கின்றது பகைவனுக்கு அருள் காட்டும் பண்பு செவ்வேளிடம் முதன்மை பெற்று விளங்குகிறது.

விசாக நட்சத்திரத்தில் பிறந்தவன் முருகன். விசாக நட்சத்திரமானது ஆறு விண்மீன்களைக் கொண்டது. இது முன்மூன்றும் பின்மூன்றுமாக அமைந்துள்ளது. இறைவனும் முன் மூன்று முகங்களையும் பின் மூன்று முகங்களையும் கொண்டு விளங்குகிறான்.

## வேலவன்

வெற்றியைத் தருகின்ற வேலைக் கையில் ஏந்தியதால் வேலன், வேலவன் எனும் பெயர்கள் வந்தன.

## குருநாதன்

பிரம்ம வித்தை மரபுகளை விளக்கும் ஆசிரியன். சிவனுக்கும் அகத்தியனுக்கும் நந்திதேவனுக்கும் உபதேசித்தவன்

## பழநி

பழத்தின் பொருட்டு ஆண்டிக் கோலத்தில் ஞானப் பழமாக விளங்குகிறான்.

### வேளைக்காரன்

தனது அடியவர்களை உற்ற வேளையில் வந்து காக்கும் சிறப்பால் முருகன் வேளைக்காரன் எனப்படுவான். வேளைக் காரர் என்னும் படையைச் சார்ந்த வீரர்கள் எப்படி உற்ற வேளையில் உயிர்கொடுத்துத் தங்கள் அரசனைக் காப்பாற்றும் உறுதியும் கடமையும் உடையவரோ அங்ஙனம் தன் அடியவர் களைக் காப்பதில் உறுதி கொண்டவன் முருகன். அருணகிரி நாதர் முருகனை வேளைக்காரன் என அழைத்துப் பாடியிருக் கின்றார்.

இவ்வாறு பல பெயர்களைக் கொண்டு அழகன் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான். அவனுக்கு ஆண்டுதோறும் ஆடித் திங்களில் காவடி எடுத்து பக்தர்கள் பூசை செய்கின்றனர். காவடி எடுக்கும்போது காவடி எடுப்பவர்கள் வழிநடை களைப்புத் தீரவும் முருக பக்தியை வெளிப்படுத்தவும் பாடும் பாடல்கள் காவடிப் பாட்டு ஆகும்.

காவடி என்பது காவுதடி என்னும் சொல்லின் மரூஉ மொழியாகும். காவுதடி என்றால் சுமக்கும் தடி எனப்பொருள் படும். ஒரு தடியின் இரு முனைகளிலும் பொருள்களைக் கட்டி தோளில் சுமந்து செல்வது பண்டையர் மரபு. க்விளெம் கலனே (புறம் 206) காமமும் நாணும் உயிர் காவாத் தூங்கும் (குறள் 1163) எனத் தமிழிலக்கியங்கள் பகரும்.

காவடி எடுக்கும் வழக்கம் எவ்வாறு ஏற்பட்டது என்பதைப் பின்வரும் புராணக் கதை விளக்கிறது. முன்பொரு காலத்தில் அகத்திய மாமுனி தென்னாடு வந்தபோது சிவன் இரு குன்று களை கொடுத்தனுப்பினான். அவர் வரும் காட்டுப் பகுதியில் அவற்றை இறக்கி வைத்துவிட்டு தென்னாட்டிற்கு வந்தார். பின்னொரு சமயம் அவற்றை எடுத்துவர புறப்படுங்கால் அவரது சீடருள் ஒருவரான இடும்பன் தான் எடுத்து வருவ தாகக் கூறிச் சென்று இரு குன்றுகளையும் கண்டான்.

எடுத்துச் செல்வது எவ்வாறு எனப் புரியாது திகைத்தான். அப்போது பிரம்மனின் பிரம்ம தண்டம் தென்பட்டது. பாம்புகள் பிரமதண்டத்தையும் குன்றையும் பிணித்தன. அதன்பின் தோளில் சுமந்து எடுத்து வந்தான. அவ்வாறு வந்தவன் பழநி காட்டுக்கு வந்ததும் சற்றே இளைப்பாறக் கீழே வைத்தான். பிறகு எடுக்க முனைந்தான்; முடியவில்லை. குன்றை ஏறிட்டுப் பார்க்க அப்போது ஒரு சிறுவன் மலைகள் என்னுடையவை என்றான். இடும்பனுக்கும் சிறுவனுக்கு மிடையே சண்டை மூண்டது. முடிவில் இடும்பன் தோற்றான். வந்த சிறுவன் முருகனே என உணர்ந்தான். மேலும் என்போல் காவடி சுமந்து வருவோருக்கு அருள வேண்டும் என்று பெருமானிடம் வேண்டிக் கொண்டான். அன்று முதல் முருகனுக்குக் காவடி எடுக்கும் மரபு இருந்து வருகிறது.

திருமுருகனின் நேர்த்திக்கடன் முடிக்க காவடி எடுக்கும் போது பாடும் காவடிப் பாட்டில், முருக மந்திரத்தின் சிறப்பு, முருகனின் வரலாறு, பாத வருணனை, முருகனின் வருகை' காவடி வகைகள் காவடி செலுத்தும் முறைகள், பக்தர்களின் வேண்டுதல்கள் ஆகிய கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன.

காவடிப் பாட்டு மங்கல எழுத்துக்களுள் ஒன்றான 'அ' கரத்தில் தொடங்குகின்றது. மேலும் 'அரகரா', 'சிவசிவா' எனும் சொற்கள் இடம் பெற்றுள்ளன.

''அரகரா முருகையா என்றசத்தம்
அனுதினம் ,, நான் மறவேன்
சிவசிவா ,, என்ற சத்தம்
சிந்தைதனில் ,, நான் மறவேன்
ஓதி வைத்த ,, என் குருவே
ஒரு நாளும் ,, நான் மறவேன்
பாடி வைத்த ,, என் குருவே
பல நாளும் ,, நான் மறவேன்''

(காவடிப் பாட்டு)

ஒரு தெய்வத்தைப் பற்றிப் பாடும்போது பாட்டுடைத் தலைவனின் முன்னோர் மற்றும் உறவினரைப் பற்றிக் கூறுதல் புராண, இதிகாச மரபு. காவடிப் பாட்டு ஒரு நெடும் பாட்டே ஆயினும் அதில் முருகனின் பெற்றோரைப் பற்றி அழகாக வருணிக்கப் பெற்றுள்ளது.

| | | |
|---|---|---|
| ''ஆதிசிவன் | முருகையா | ஈன்றெடுத்த |
| ஆறுமுக | ,, | வேலவரே |
| பார்வதியாள் | ,, | பெற்றெடுத்த |
| பாலகனே | ,, | காக்கவேணும் |
| சங்கரியாள் | ,, | பெற்றெடுத்த |
| சண்முகனே | ,, | காக்கவேணும் |
| விநாயகர்க்கு | ,, | இளையவரே |
| வேலவனே | ,, | காக்கவேணும்'' |

(காவடிப் பாட்டு)

உமையொரு பாகனின் இளையவனின் நாடு கண்டியும் பழநியுமாகும், தேசம் கதிர்காமமும் பாரமலையும் ஆகும். அவனுடைய ஆடை காவி நிறத்தினது. செம்பு நிறத்தில் கடுக்கனும் பொன்னில் பூணூலும் அணிந்தவன். மல்லிகைப்பூ போன்ற வள்ளியம்மை வலதுபுறமும் மருக்கொழுந்து போன்ற தெய்வயானை இடப்புறமும் அமர்ந்து அணி செய்கின்றனர். அடியெடுத்து வைக்கும் கால்களுக்கு எருக்கம்பூ, மாதளம்பூ ஆகிய மலர்களால் ஜல்லடம் அணியப்பெற்றுள்ளது.

இத்தகு அழகன் கையிற் வேல்கொண்டு, கச்சைபை இழுத்துக்கட்டி மயிலுக்கு ஜீணிகட்டி, மயிலேறி, காலாட, வேலைசைய வருகிறான். காவிநிற ஆடை கட்டி முன்னால் விட்ட சுங்கில் மோகக்கன்னி அடசரமும், பின்னே விட்ட சுங்கில் பிரம்மனின் அடசரமும் இருக்கின்றன,

திருமுருகனுக்குப் பூ, புகை முதலியன கொண்டு படைத்தல் மரபு. அவைமட்டுமன்றி காவடி கொண்டு செலுத்தி வழிபடுதலும் மரபு. காவடி பலவகைப்படும். அவை,

பால்காவடி, தேன்காவடி, சந்தனக் காவடி, கற்பூரக் காவடி, பஞ்சாக்ஷரக் காவடி, சாம்பிராணிக் காவடி, சர்ப்பக் காவடி, சேவல் காவடி, மச்சக் காவடி, இளநீர்க் காவடி, பன்னீர்க் காவடி, தயிர்க் காவடி, பஞ்சாமிர்த காவடி, சர்க்கரைக் காவடி, மாம்பழக் காவடி, வாழைக் காவடி, கொய்யாக் காவடி, மாதுளக் காவடி, அபிஷேகக் காவடி என்பனவாம்.

திருப்பரங்குன்றம், திருச்சீர் அலைவாய், திருஆவினன் குடி, திருஏரகம், குன்றுதொறு ஆடல், பழமுதிர்ச் சோலை எனும் ஆறுபடை வீடுகளிலும் ஆற்காடு, வேலூர், திருப் போரூர், குடியேற்றம் முதலியவிடங்களிலும் காவடி எடுக்கும் படிக்கம் காணப்பெறுகின்றது.

காவடி எடுக்கும் பக்தர்கள் நீரில் குளித்து, பட்டாடை யுடுத்தி, மோதிரங்கள் அணிந்து குண்டுமல்லி, மல்லிமுல்லை, அலரிப்பூ, பவழமல்லி, சாமந்திப்பூ, ஆகியனவற்றால் மாலை கட்டி அகத்தானும் புறத்தானும் தூய்மையுடன் சென்று முருகனுக்குச் செலுத்துவர்.

அவ்வாறு செலுத்துங்கால் பக்தர்கள் தமக்குத்தெரியாமல் எறும்பு முதலிய சிற்றுயிர்கள் காலில் பட்டுஇறந்திருந்தாலும், சில பிழைகள் நடந்திருந்தாலும் பொறுத்தருள வேண்டுமென முருகனிடம் விண்ணப்பம் செய்கின்றனர்.

| | | |
|---|---|---|
| ஆறுதபபு | முருகையா | தூறு பிழை |
| அடியார்கள் | ,, | செய்ததெல்லாம் |
| கோடி தப்பு | ,, | தூறு பிழை |
| குழந்தை நாங்கள் | ,, | செய்த தெல்லாம் |
| ஆதரித்தே | ,, | ரக்ஷிப்பாயென |
| அனைவரும் | ,, | உன்னை நாடினோம்'' |

(காவடிப் பாட்டு)

இவ்வாறு காவடிப்பாட்டு அழகனைப் பற்றியும் காவடிப் பாட்டைப் பற்றியும் அழகுற விளக்குகின்றது.

''முருகனே! செந்தி முதல்வனே! மாயோன்
மருகனே! ஈசன் மகனே! ஒரு கை முகன்
தம்பியே! நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கை தொழுவேன் நான்''

(முருகு)



# பொங்கல் திருநாள்

நீண்ட காலமாகத் தமிழகத்தில் கொண்டாடும் விழாக்களில் பொங்கல் விழாவும் ஒன்றாகும். இதனை உழவரின் மகிழ்ச்சி பொங்கும் விழா என்பர். பொங்கல் விழா நான்கு நாட்களில் கொண்டாடப் படுகிறது. முதல் நாள் விழா போகிப் பண்டிகை ஆகும்; இது இந்திரனுக்கு உரியது. இரண்டாம் நாள் விழா பொங்கல்; இது உழவிற்கு உதவிய சூரியக் கடவுளுக்குக் கொண்டாடப்படுவதாகும். மூன்றாவது நாள் மாட்டுப் பொங்கலாகும். இது உழவிற்குப் பயன்பட்ட மாடுகளுக்கு நன்றி செலுத்தும் வகையில் அமைவது, நான்காவது நாள் காணும் பொங்கல் அல்லது கன்னிப் பொங்கல் என்று அழைப்பர், மக்கள், இந்நாளில் விளையாட்டுகள், பொழுது போக்குகள் ஆகியனவற்றில் ஈடுபட்டு மகிழ்ச்சியில் திளைப்பர்.

## போகிப் பண்டிகை

'போகி' எனும் சொல்லிற்கு 'மகிழ்ச்சி' என்பது பொருள் ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் வரை நெல் பயிரிடும் காலமாகும். உழவர்கள் மழையின் உதவியால் கழனியில் இரவும் பகலும் இடை விடாதுஉழைத்து, உழைப்பின் பயனைமார்கழி இறுதி நாளில் வீட்டிற்கு நெல் மணியாகக் கொண்டு வருவர். இதுதவிர குறுகிய காலப் பயிர்களான அவரை, துவரை, காய்கறிகள் முதலியனவும் மார்கழி மாத இறுதியில் வீட்டிற்கு வந்து சேரும். சுற்றமும நட்பும் சூழ மனைவி மக்களுடன் உழவர்கள் மகிழ்ச்சியாக இருப்பர். இதனால் இதற்குப் போகி பண்டிகை என்ற பெயர் வந்திருக்கலாம். கண்ணபிரானும் பகவத் கீதையில்,

''மாஸானாம் மார்க்சீர்ஷோ ஹம்ருதூனாம் குஸுமாகர''
(கீதை. 10.35)

என்கிறார், அதாவது மாதங்களிலே நான் மார்கழியாக விளங்குகிறேன் என்கிறார். இந்திரனுக்கு 'போகி' என்று பெயர். மார்கழி மாத இறுதி நாள் இந்திரனுக்கு விழா கொண்டாடப்படுவதால் போகிப் பண்டிகை எனும் பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

போகியன்று குழந்தைகளும் பெரியவர்களும் விடியற் காலத்தில் எண்ணெய் தேய்த்துக் குளிப்பர்; புத்தாடை உடுத்திக் கொள்வர். பழையதும் பயனற்றப் பொருட்களுமான பாய், துடைப்பம், முறம், கூடை முதலியனவற்றை வீட்டின் முன்னர் இட்டுத் தீயிட்டுக் கொளுத்துவர். சிறுவர்கள் தீயினைச் சுற்றி நின்று மேளம் அடித்து மகிழ்வர்.

போகிப் பண்டிகையன்று வீடுகளுக்கு அழகிய கோல மிட்டும் தோரணங்கள் கட்டியும் அழகு செய்வர். நண்பகல் வேளையில் இந்திரனுக்கு உணவு படைத்து மஞ்சள் கொத்துக்களை வைத்து, ஐந்துமுக குத்துவிளக்குகளை ஏற்றி இரு புறம் வைத்து வழிபடுவர். பின்னர் அவ்வுணவினை அனைவருக்கும் பகிர்ந்து கொடுப்பர்.

அன்று மாலை உழவுத் தொழிலுக்கு உதவிய தச்சர், கொல்லர், துப்புரவு செய்வோர், ஊர்க்காவலர் முதலியோருக்கு அறுவடை செய்த புதிய நெல்லையும் வெல்லக் கட்டிகளையும் கரும்புகளையும் நிலச்சுவான்தார் பரிசாக அளிப்பர்.

இப்போகிப் பண்டிகையோடு கிருஷ்ண அவதாரத்தையும் புராணங்கள் தொடர்புபடுத்திப் பேசுகின்றன. ஆண்டுதோறும் மழைக் கடவுளான இந்திரனுக்குப்பொங்கல் இட்டுப் படைத்து

நன்றாக மழை வேண்டி மக்கள் வழிபடுவர். திருமால் கண்ணனாக அவதரித்த போது இந்திரனை வழிபட வேண்டாம் என ஆயர்களைத் தடுத்து நிறுத்தினார். இதைக் கண்ட இந்திரன் கல்மழை பெய்வித்து ஆயர்களையும் ஆக்களையும் துன்புறுத்தினான். கண்ணன் கோவர்த்தன மலையை குடையாகப் பிடித்து ஆயர்களையும் ஆக்களையும் காத்தருளினார். தன் ஆற்றல் பயனற்றுப் போனதால் இந்திரன் கண்ணபிரானை வணங்கித் தன்னையும் ஆயர்கள் வழிபடும்படி அருள் செய்ய வேண்டினான். அதற்கேற்ப இந்திரனை மக்கள் போகிப் பண்டிகை யன்று வழிபடத் துவங்கினர். சிலப்பதிகாரம், மணிமேகலை அகியன இந்திரனுக்கு விழா எடுத்த செய்தியைக் கூறுகின்றன.

இப்பண்டிகை தமிழகம் மட்டுமன்றி பிற மாநிலங்களிலும் வேறுவேறு பெயர்களில் கொண்டாடப்படுகிறது. சான்றாக, பஞ்சாப் மாநிலத்தில் 'லோரி' (Lohri) என்று பெயரிலும் ஆந்திர மாநிலத்தில் 'கொப்பிப் பண்டிகை' (Goppi festival) என்ற பெயரிலும் கொண்டாடப் படுகின்றது. மார்கழி மாதம் முதல் நாளிலிருந்து இறுதி நாள் வரை நாள்தோறும் வாசலில் கோலமிட்டு மூன்று உருண்டை சாணம் வைத்து அவற்றின் மீது பூசனைப் பூவை வைப்பர். இம்மூன்று சாணி உருண்டைகள் ஆக்களையும் அவற்றைக் காத்த கண்ணனையும் துணைக் காரணமாக அமைந்த கோவர்த்தன மலையையும் குறிக்கும். இந்நாளில் மாலை வேளையில் விளக்கு வைத்து பூக்கள் தூவி கொப்பி அடித்துப் பாட்டுப் பாடுவர். இதனால் இவ்விழா வினைக் 'கொப்பிப் பண்டிகை' என அழைப்பர்.

## பொங்கல் திருநாள்

'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்பது பழமொழி. தை மாதத்தின் முதல் நாள் பொங்கலாகும். தமிழர் இதனைப் 'பொங்கல் திருநாள்' என அழைப்பர். 15 ஆம் நூற்றாண்டில்

வாழ்ந்த தெலுங்குக் கவி 'ஸ்ரீ நாதுடு' இதைப் 'பெணுபண்டுவு' (Penu Panduvu) என அழைக்கின்றார். இதனை 'மகர சங்கராந்தி' எனவும் அழைப்பர். 'சங்கராந்தி' எனும் சொல்லுக்குச் 'சேருதல்' என்று பொருள். சூரியன் பன்னிரு ராசிகளுடன் ஒவ்வொரு மாதமும் சேருவான். பன்னிரு ராசி களுள் மேஷம், கடகம், துலா, மகரம் ஆகிய நான்கே முக்கிய மானவை. அவற்றுள், சூரியன் மகரராசியுடன் சேரும்முதல் நாளே நாம் பொங்கல் எனக் கொண்டாடப்படும் மகர சங்கராந்தியாகும்.

வருடத்தில் முதல் ஆறுமாத காலத்தை (ஜனவரி 15 முதல் ஜுலை 15 வரை) உத்தராயணம் எனவும் பிற்பகுதி ஆறுமாத காலத்தை (ஜுலை 15 முதல் ஜனவரி 15 வரை) தட்சினா-யணம் எனவும் அழைப்பர். இவ்விரண்டில் உத்தராயணப் பகுதிக் காலமே சிறந்தது என்பர். ஏன் இறப்புக் கூட தட்சினாயணக் காலத்தில் நிகழ ஆன்றோர் விரும்பமாட் டார்கள். தட்சினாயண காலத்தில் சூரியன் வடக்கிலிருந்து தெற்கு நோக்கியும் உத்தராயண காலத்தில் தெற்கிலிருந்து வடக்கு நோக்கியும் பயணம் செய்வான். உத்தராயண காலம் செல்வ செழிப்பில் மேன்மையுற்று விளங்கும். மகாபாரதப் போரிலே பீஷ்மர் அருச்சுனன் அம்பால் வீழ்த்தப்பட்டார். போர்க் களத்தில் அம்புகளால் படுக்கை செய்து அவரைப் படுக்க வைத்தனர். தட்சினாயண காலத்தில் அவர் உடலில் அம்பு புகுந்திருந்தாலும் உத்தராயணம் வரும் வரை காத் திருந்து உயிர் நீத்தார் எனப் பாரதம் கூறுவதிலிருந்து உத்தராயணத்தின் சிறப்பு புலப்படும். பொங்கல் திருநாள் உத்தராயணத்தின் முதல் நாளிலேயே கொண்டாடப் படுகின்றது.

'பொங்கல்' எனும் சொல் 'பொங்கு' எனும் அடிச்சொல்லி லிருந்து தோன்றியதாக அறிஞர் மு. அருணாசலம் கருது கிறார். இச்சொல்லிற்குச் சமை, பொங்க வை முதலிய

பொருள்கள் உண்டு. அறுவடைசெய்து கொணர்ந்த நெல்லைக் குற்றிப் புத்தரிசியாக்கிப் புதுப் பானையில் இட்டு பால் ஊற்றி அடுப்பில் ஏற்றுவர். பானையிலிருந்து பாற்சோறு கொதித்துப் பொங்கி வழியும்; அப்போது பெண்களும் குழந்தைகளும் 'பொங்கலோ பொங்கல்,' 'பொங்கலோ பொங்கல்' எனக் கூவி மகிழ்ச்சியில் திளைப்பர். இவ்வாறு பானை பொங்கி வழிதல் ஆண்டு முழுதும் நல்ல விளைச்சலுக்கு அறிகுறி என உழவர் கருதுவர்.

பின்னர்ப் பொங்கல் பானையை அடுப்பிலிருந்து இறக்கி, அதற்கு மஞ்சள் பூசி குங்குமம் இட்டு இஞ்சிச்செடி களையும் கரும்பையும் இருபுறம் வைத்துச் சூரியனைத்திறந்த வெளியில் வழிபடுவர். இவ்வழிபாடு காலை 11 மணி முதல் நண்பகல் 1 வரையில் நிகழும். ஏனெனில் அப்போது சூரியன் உச்சி வானில் உலா வந்துகொண்டு இருப்பான். அப்போது உணவுப் பொருட்களின் மீது அவன் கிரணக் கைகள் முழுதும் படும். இதனால் சூரியன் அவ்வழிபாட்டை ஏற்றுக்கொண்ட தாகப் பொருள் என்று மக்கள் கருதினர் எனலாம்.

சூரியனை வாழ்த்தி வணங்கும் முறை சிலப்பதிகாரத்தில் இடம்பெற்றுள்ளது. இங்குப் பொங்கல் எனும் பெயரில் விழாவின்றி, இவ்வுலக உயிரினங்களுக்குச் சூரியன் உதவுவ தாகக் கருதி வாழ்த்துப்பாடல் அமைந்துள்ளது.

''ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதுங்
காவிரி நாடன் திகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்''

(சிலப். மங்கல. அடி 4-6)

என்கிறார் இளங்கோவடிகள். இவ்வாறு துவக்க காலத்தில் ஞாயிற்றைப் போற்றிய மரபு பிற்காலத்தில் பொங்கல் திருநாள் கொண்டாடும் அளவில் வளர்ச்சியுற்று இருக்கலாம் என்று எண்ண இடமுண்டு,

## மாட்டுப் பொங்கல்

உழவர் தோளுக்குத் தோள் கொடுத்து உதவுவன மாடு களாகும். இவற்றிற்கு நன்றி செலுத்தும் வகையில் மாட்டுப் பொங்கல் கொண்டாடப் படுகின்றது. இதைக் 'கோ பூஜை' எனவும் கூறுவர். இவ்விழா பொங்கலுக்கு அடுத்த நாளில் கொண்டாடப் படுவதாகும்.

தனக்கிருந்த ஒரே மகனையும் கன்றிழந்த பசுவின் துயரத்தைக் கண்டு பொறுக்கலாற்றாது தேர்க்காலில் கட்டி இடறிக் கொன்று பசுவின் துயரத்தைத் தீர்த்தான் மனுநீதிச் சோழன் எனப் புராணக் கதை கூறுகிறது. இக்கதையிலிருந்து பண்டைக் காலத்தில் மன்னர்கள் பசுவிற்குக் கொடுத்த மதிப்புப் புலனாகும்.

மேலும், தமிழ் இலக்கியங்களில் வரும் மாடு எனும் சொல்லிற்குச் செல்வம் என்பது பொருள். மாடுகள் இல்லத்தில் மிகுந்திருந்தால் மிகுந்த செல்வம் உண்டாகும் என நம்பினர். மாட்டிற்கு விழா எடுப்பது செல்வத்திற்கு விழா எடுத்தலுக்குச் சமமாகும். எனவே மாட்டுப் பொங்கல் கொண்டாடுவதாகக் கருதுகின்றனர்.

மாட்டுப் பொங்கலன்று மாடுகளை வேலை வாங்க மாட்டார்கள். மாட்டுப் பொங்கலன்று வைகறையில் முதல் நாள் பொங்கலன்று அரிசி கழுவிய நீரை எடுத்துச் சென்று கழனிகளில் தெளித்துப் 'பொங்கலோ பொங்கல்' என்று கூவும் ஓசை கழனிகளெங்கும் இனிமையாக ஒலிக்கும்.

மாட்டுப் பொங்கலன்று மாடுகளைக் குளிப்பாட்டி நெற்றியில் மஞ்சள் பூசி, குங்குமம் இட்டு அதன் கொம்பு களைச் சீவி வர்ணம் பூசி, மாலைகள் இட்டு, பலூன்கள் கட்டி அழகு செய்வர். கொம்பின் நுனியில் சலங்கை கட்டும்

வழக்கமும் உண்டு. பின்னர் மாலை வேளையில் மாட்டிற்குப் பூசை செய்து மேளம் முழங்க வண்டியில் கட்டியோ தனித்தோ ஊரைச் சுற்றி வரச் செய்வர்.

இந்நாளில் அரிசிச் சோற்றையும் ஏழு அல்லது இருபது வகையான சாய்கறி உணவுகளைச் சமைத்துக் கையில் ஒரு பிடி சோற்றையும் காய்கறிகளையும் கொண்டு சென்று பசு விற்கு ஊட்டுவர்.

மாட்டு பொங்கலன்று 'ஜல்லிக் கட்டு' அல்லது 'மஞ்சி விரட்டு' எனக் கூறப்பெறும் பாடுபிடி சண்டையும், கோழிச் சண்டைகளும், மாடுகளின் தலையில் பணமுடிப்பு கட்டப் பெற்று; அக்காளையை யார் அடக்குகிறார்களோ அவர்களுக்கே அப்பணம் சொந்தம் எனக் கூறும் வீர விளை யாட்டுகளும் நிகழும்.

### *காணும் பொங்கல்*

பொங்கலின் இறுதிநாள் விழாவாக இது அமையும். இதனைக் 'காணும் பொங்கல்' எனவும் கன்னிப் பெண்கள் பொங்கல் வைப்பதால் 'கன்னிப் பொங்கல்' எனவும் 'கரிநாள்' எனவும் அழைப்பர். கரிநாளில் எவ்விதச் செயலை யும் செய்தல் கூடாது என்பது ஆன்றோர் கருத்து. ஆகவே மக்கள் உழைக்காமல் எவ்விதச் செயலையும் செய்யாமல் சில விளையாட்டுகள் விளையாடிப் பொழுதுபோக்கி மகிழ்வர்.

ஆண்கள் சடுகுடு என்று அழைக்கப்பெறும் கபாடி விளையாட்டினை விளையாடுவர். மாலை நேரம் ஆனதும் அவ்வூர்க் கடவுள் வீதி உலா வரும்.

நகரங்களில் இதைக் காணும் பொங்கல் என அழைப்பர். இந்நாளில் சிறியவர்கள் தங்கள் உறவின் பெரியாரைக் கண்டு

ஆசிபெறுவர். ஊரில் பணி புரிபவர்கள் ஊர் பெரியவர்களிடம் 'இணாம்' பெற்று மகிழ்வர். சிலர் இந்நாளில் நகரங்களில் இருக்கும் கோயில்களுக்குச் சென்றும், பார்க்கவேண்டிய இடங்களை உல்லாசமாகக் கண்டுகளித்தும் மகிழ்ச்சியில் திளைப்பர். இவ்வாறு காணும் பொங்கலோடு பொங்கல் திருநாள் இனிதே நிறைவு பெறுகிறது.

இப்பொங்கல் விழாவிற்கு அடிப்படையாக அமைவது மகரராசியாகும். இது பொன்னிறக் கொம்புகளுடைய ஆடு போன்று தலைப்பகுதியும் முதலையின் வால் பகுதி போன்று இறுதிப் பகுதியும் உடையதாக வானில் விளங்கும் என்று இந்து புராணங்கள் கூறுகின்றன. கிரேக்கர்கள் முன்பகுதி ஆடு போன்றும் பின்பகுதி மீன் போன்றும் அமைப்புடையதாக மகரம் விளங்குகிறது என்கின்றனர். மேலும், அவர்கள் மகர ராசி எவ்வாறு தோன்றியது என்பதற்கு இரு கதைகள் கூறி விளக்குகின்றனர். பேக்கான் (Backon) என்னும் தேவதை பிற தேவதைகளுடன் கூடி நைல் (Nile) நதிக்கரையில் விருந்து உண்டு கொண்டு இருந்தது. அப்போது டைபான் (Typhon) என்னும்பூதம் அங்குத் தோன்றியது. அதைக்கண்ட பேக்கன் தவிர பிற தேவதைகள் அஞ்சியோடின. பேக்கான் மட்டும் தனித்து நின்றது. 'நீ உன் உருவத்தை மாற்றிக் கொண்டால் உன்னை உயிரோடு விடுவேன் என்று டைபான் கூறியது. அதற்கேற்ப பேக்கான் தன் உருவத்தை ஆடாக மாற்றிக் கொண்டது. இதுவே மகரராசியாக வானில் தோன்றுகிறது என்கின்றனர். சிலர், 'பான்' எனும் ஒரு தேவதை நைல் நதிக் கரையில் உலாவிக் கொண்டு இருந்தது திடீரென்று மயக்கமுற்று நைல் (Nile) நதியில் விழுந்து விட்டது; முழுகி எழுந்ததும் ஆடாக மாறிவிட்டது இதனை ஜல தேவதை என்பர். இதுவே வானில் மகரராசியாகத் தோன்றுகிறது என்கின்றனர்.

எகிப்து தத்துவ ஞானிகள் 'நம்' என்பதை ஜலதேவதை யாகக் கருதினர். ஏனெனில் மகரராசிக்கும் 'நம்' தெய்வதிற் கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாகக் கருதுகின்றனர். மகரராசியுடன் சூரியன் சேரும் காலத்தில் அனைத்தும் செல்வச் செழிப்புடன் விளங்குகிறது. அக்காலத்தில்தான் எகிப்திலும் நைல் நதி பொங்கி வழிவதும் இன்ன பிறவளமும் ஏற்டுகின்றது, எனவே அவர்கள் மகர ராசியுடன் 'நம்' தெய்வத்தை ஒப்பிட்டுப் பேசுகின்றனர்.

எனவே, பொங்கல் திருநாள் பற்றிய கருத்துகள் ஒரு மாநிலம், ஒரு நாடு என்ற அளவில் இல்லாது உலகளவில் பரந்து விளங்குவதைக் காணலாம்.



# தெலுங்கு இலக்கியத்தில் நத்கீரன் கதை

தூர்ஜடி தெலுங்கு மகாகவி. இவர் ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் அவையை அலங்கரித்த அஷ்டதிக்கஜங்களுள் ஒருவராவர். இவருடைய பிறப்பு, வளர்ப்பு, இனம் முதலிய வரலாறுகளைப் பற்றி அறிய சான்றேதுமில்லை. ஸ்ரீ காளஹஸ்தி மஹாத்மியம், ஸ்ரீ காளஹஸ்தி சதகம் எனும் இரு நூல்களை இவரியற்றினார். ஸ்ரீ காளஹஸ்தி மஹாத்மியத்தில் நத்கீரன் கதை இடம்பெற்றுள்ளது. தமிழில் நக்கீரர் என வழங்கப்பெறும் இப்புலவரே தெலுங்கிலும் நத்கீரர் என அழைக்கப்பட்டார்.

அறுபத்து நான்கு கலைகளைக் கபட நாடகம் வழி விளங்கும் வாலவாயி சொக்கநாதர் அவதரித்த பூமியாகவும் அவன் சதியான மீனாட்சி எனப் பெயர் பெற்று இலங்கும் பார்வதிதேவி ஆட்சி செலுத்தும் இடமாகவும் மதுரா நகரம் சிறப்புடன் விளங்கிற்று. அங்கே திராவிட மொழிக்குரிய சங்கப் பலகையும் தாமரைத் தடாகமும் இருந்தன. அதோடு மட்டுமின்றித் தென் கடலுக்குத் துணைவியான தாமிரபரணியும் அதனெதிரே வைகையும் ஓடி வளஞ்செயா நின்றன.

அந்நகர மக்கள் எவ்விதக் குறையுமின்றி இன்பமுடன் வாழ்ந்து வந்தனர். மேலும், பாண்டிய மன்னனுக்குச் சிவன் மருமகனாக வாய்த்தான் எனக் கூறுமளவிற்கு அந்நகரம் எழில்பெற்று விளங்கிற்று. அந்நகரத் தாமரைத் தடாகத்தின் மீது பாண்டியன் மகளான மீனாட்சிதேவி எழிலுடன் வீற்றிருந்தாள். அவளுக்கு மாணிக்கவல்லி, மரகதவல்லி. ஆனந்தவல்லி, அமுதவல்லி, கற்பூரவல்லி, கற்பகவல்லி,

முதலிய பெயர்கள் இருந்தன. தன் பெயரில், தன்னருளை, தன் பிரசாதத்தில்கொடுத்துக் காப்பாற்றும் மீனாட்சிதேவியை பெண்கள் புகழா நின்றனர்.

அன்னைக்குப் பூசைசெய்ய வந்த பெண்கள் ஈசுவரன் தன் மனைவியை எவ்வாறு அழைக்கின்றானோ அவ்வாறே, 'ஏ! கற்பக வல்லி வா, அமிர்தவல்லி போ, கற்பகவல்லி, மாணிக்கவல்லி, ஆனந்தவல்லி, மீனாட்சி என ஒருவரை யொருவர் தம்முள் அழைத்துக் கொண்டனர்.

மதுரா நகரத்தைப் பாண்டிய மன்னன் ஆட்சிபுரிந்து வந்தான். அவன் பராக்கிரம சாலியாகவும் நடுவுநிலைமை தவறாத ஆட்சியாளனாகவும் தன்னைப் பொருவும் மன்னர் களுக்குக் கதிரவனை யொத்தும் தேவேந்திரனைவிட மிகுந்த புகழும் தானம் செய்வதில் இரண்டாவது கர்ணனாகவும் கடலைப் போன்று கம்பீரம் உடையவனாகவும் விளங்கினான்.

திராவிட மொழியிலுள்ள இலக்கணம், அகராதி, அலங்காரம், கவிதை செப்புதற்குரிய இலக்கியக் கொள்கைகள் ஆகியவற்றை நிர்ணயிக்கும் பொருட்டு பதினெட்டு எழுத் துக்கள் அடங்கிய சங்கப் பலகையை அகத்திய மாமுனி இமயமலையிலிருந்து கொணர்ந்து பாண்டிய மன்னனுக்குக் கொடுத்தது,

> ''கேள், இது திராவிட மொழிக்குரியது. கல்வியிற் பெரிய சரஸ்வதி தேவியை ஒப்ப வர்க்கு எத்துணையராயினும் இது இட மளிக்கும், குறைந்தது ஒருவரையும் உச் சளவு எத்தனை பேரையும் அமர்த்திக் கொள்ள இடமளிக்கும். இதை நீ முறையாக வைத்துப் பூசை செய்வாய்''

என எடுத்துரைத்தார். பாண்டியரும் பரம்பரை பரம்பரையாக அவ்வாறு பூசித்து வந்தனர். கலியுகம் வந்தது, அக்காலத்தில் ஒரு பாண்டியன் பிறந்தான். பூமியை தாங்குவதில் எட்டு திக்குகளைச் சுமக்கும் யானையைப் போன்றும் காத்தற் றொழிலில் கூர்ம, வராகவதாரம் எடுத்துத் திருமால் இவ் வுலகைக் காத்தற் போன்றும் அவன் விளங்கினான்.

''ஆ ராஜு பாண்டிய தாத்ரீ
தௌரம்தர்ய பிரமோதிதக்ராவ ஹரி
த்வாரண புஜங்கபதி பூ
தார கமட்ட பரிவ்ருட ப்ரதாநிதி''

(ஸ்ரீ. கா. ம. பா. 13)

அவன், அமிழ்தம் போன்ற சொல்லுடைய காவியம் இயற்ற வல்லோரையும் சைவசித்தாந்தத்தில் கடலையொத்த அறிவுடையோரையும் நீரைவிடுத்துப் பால் அருந்தும் அன்னம் போன்ற நக்கீரர் உட்பட பன்னிரண்டு புலவர்களையும் சங்கப் பலகையின் உறுப்பினர்களாக நியமித்தான். அது பார்பதற்கு சரஸ்வதி தேவியின் கழுத்தை அலங்கரிக்கும் 'கண்டாபரணம்' எனும் அணியை யொத்து விளங்கிற்று. அச்சபையில் சங்கப் பலகையின் மீது அமர்ந்து எவரேனும் தம் பாடலை அவை யோர் மெச்சும் அளவில் பாடிக் காட்டினால் ஆயிரம் தங்கக் காசுகள் பெறுதற்குரியோராய் மதிக்கப் பெற்றனர்.

அவ்வாறு பாண்டிய மன்னன் ஆண்டுவருங்காலத்தில் கொடிய பஞ்சம் தோன்றியது. மழை பொய்த்ததால் மக்கள் வருந்தினர். மீன இராசியில் சனி புகுந்ததாலும் கிழக்குத் திசையில் வால் நட்சத்திரம் தோன்றியதாலும் பஞ்சமேற் பட்டது. அப்போது மேக கூட்டங்கள் மழையின்றி வானில் திரிந்தன. மழைத்துளியைத் தவிர மழை அரிதாக இருந்தது. காற்றும் சூரிய ஒளியும் மழையை இல்லையெனச் செய்தன. அந்நேரத்தில் தென்பகுதியில் இடியும் மின்னலும் மிகுந் திருந்தது.

குனுகுலு, ஊதர்லு முதலான அரிசி வகைகளும் அல்லி யரிசி, மூங்கிலரிசி முதலிய சிறிய அரிசி வகைகளும் துங்கக் கிழங்கு, ஈத்திலைக் குருத்து ஆகியனவற்றையும் மக்கள் உணவுக்காகப் பயன்படுத்தினர். ஏற்றமிறைத்து பயிர்செய்து அறுபது நாட்களில் வந்து சேரவேண்டிய கேழ்வரகும் பூச்சிப் பட்டு அழிந்தன.

இடைநிலை வாழ்க்கைத் தரத்தார் எலும்பும் தோலுமாக இருந்தனர். தள்ளினால் தொன்னூறு இடங்களில் விழுபவ ராக மெலிந்து இருந்தனர். ஆடவர் தம் இல்லாளை விடுத்து, செல்வம் பொருட்டு ஊர்விடுத்து இடம் பெயர்ந்து சென்றனர், கொடிய கலியானது மக்களை மட்டுமின்றி மன்னனையும் வாட்டியது.

தின்பதற்கு சிறியதளவே உணவு கிடைப்பினும், அதைத் தின்றபின் பருகுவதற்கு நீரின்மையான் உலக உயிர்கள் தம் இன்னுயிரை இழந்தன. ஒரு சிலர் உணவெடுத்து அருந்த வியலாததால் இறந்தனர்; பலர் ஊர்பெயர்ந்து வேற்றூர்க்குச் சென்றனர். பஞ்சம் தலைவிரித்தாடியதால் அவ்வூரில் வாழ்ந்த சிவ அந்தணானும் ஊரைவிட்டுச் செல்ல பயண மானான். அப்போது சிவன் அவன் முன் தோன்றி,

''யானையைப் போன்ற நடையுடைய
பெண்ணின் கூந்தல்
இயற்கையின் நறுமணம உடைத்து''

''சிந்தூர ராஜகம நாதமில்ல
பந்தம்பூ சஹஜ கந்தம்'' (ஸ்ரீ. கா. ம. பா. 27]

எனும் பொருள் பொதிந்த பாட்டை, அந்தணனிடம் கொடுத்து 'இதை மன்னனிடம் கொடுப்பாயாக. அரசன் இப்பாட்டைப் பார்த்ததும் நிறைய பொன்னும் பொருளும் உமக்கு அளிப்பான். அதோடு மட்டுமன்றி வான் செழித்து மழை

பொழிந்து நாடு நன்னிலை உறும் எனவும் உரைத்தார். அந்தணன் பாட்டுடன் சபைக்குச் சென்றான்,

சிவ அந்தணன் கொணர்ந்த பாட்டைக் கேட்டு அவையோர் ஏளனம் செய்தனர். சங்கப் பலகையின் முதன்மைக் கவியான நத்கீரரும் 'பெண்களின் கூந்தலுக்கு இயற்கையிலேயே மனம் இல்லை' என வாதித்தார். அதைக் கேட்ட அந்தணன் ''இப்பாட்டை பரமேஸ்வரன் கொடுத்தான்; இதன்கண் உள்ள பிழையை நான் அறியேன் எனக்கூறி, சுருங்கிய முகத்துடன் திரும்பி வந்து ஈஸ்வரனிடம் இவ்வாறு உரைத்தான்.

> ''உன்னை நம்பினதால் பெரும் இழிவுக்கும் ஏய்ப்புக்கும் ஆளானேன் - நானே சொந்தமாகப் பாட்டெழுதியிருந்தால் இப்பிழை நேர்ந்திராது. உன் பேச்சைக் கேட்டதால் வறுமையைவிடப் பெரிதும் துன்புற்றேன். உன்னையோ, நத்கீரனையோ குறை கூறிப் பயனில்லை; எல்லாம் என் தலைவிதி''

என வருந்தி, செல்வதற்கு விடை வேண்டி நின்றான். இவ்வார்த்தையைக் கேட்ட இறைவன், அவ்வந்தணனோடு அவையை அடைந்து நத்கீரனை வாதிற்கு அழைத்தான்.

> ''அரசன்மீது நானியற்றிய பாடலைத்தன்னால் இயற்ற முடியவில்லையே எனும் பொறாமையின் காரணமாக இப்புலவன் கொணர்ந்த பாட்டினைக் குறை கூறினாயோ? என நத்கீரனை இறைவன் வினவினான்,

அதற்கு நத்கீரன்,

> ''நீர் அனுப்பிய பாட்டில் பொருட்பிழை உள்ளது. பார்வதி தேவிக்கு வேண்டுமானால் கூந்தலில் மணம் இருக்கலாம். ஆனால் இவ்வுலகப் பெண்களின் கூந்தலில் இயற்கையிலேயே மனம் இல்லை''

என வாதித்தார்.

அப்போது இறைவன் தனது மூன்றாவது கண்ணைத் திறந்து காட்டினான். 'ஐய, நீர் மூன்றாவது கண் மட்டுமன்றி தலை முழுவதும் கண்ணாகக் காண்பித்த போதிலும் குற்றம் குற்றமே' என நக்கீரர் உரைத்தார். பின்பு சிவன் கோபமுற்று 'தொழுநோயால் துன்புறுக' எனச் சபித்தார். அப்போது நக்கீரர் மிக அஞ்சி இறைவன் திருத்தாள் மீது வீழ்ந்து, வணங்கி சாபம் நீங்குதற்குரிய வழியைக் கேட்டார். நீ கைலங்கிரியைத் தரிசித்தால் சாபவிமோசனம் கிடைக்கும்' என ஈசன் அருளினார்.

புலி, கரடி முதலிய விலங்குகளும் பாம்பு முதலிய விஷப் பூச்சிகளும் எந்நாளும் திரியும் கைலாச மலையை நான் எப்போது சென்று சேருவேன் என வருந்தி, கைலாயம் நோக்கி நக்கீரர் பயணமானார். ஐம்புகேஸ்வர லிங்கத்தைத் தரிசித்தார். பின் காவிரித்துறை மூழ்கி பாவங்களைத் தொலைத்து வழியெங்கும் தீர்த்தமாடிச் செல்வாராயினார்.

கங்கையைக் கடந்தபின் சிறிதுதூரம் காலாலும் சிறிது தூரம் கையாலும் குருதிவழியும் உடலுடன் பயணம் செய்தார் போகும் வழியில் ஒரு குளத்தைக் கண்டார். அதன் கரையில் ஆலமரம் ஒன்று இருந்தது. அம்மரத்திலிருந்து உதிர்ந்துவிழும் இலைகள் நீரில் விழுந்தால் மீனாகவும் நிலத்தில் விழுந்தால் பறவையாகவும் மாறும் காட்சியை நக்கீரர் கண்ணுற்றார். ஓரிலை பாதி நிலத்திலும் பாதி நீரிலும் படும்படி விழவே

பாதி பறவையாகவும் பாதி மீனாகவும் மாறி இருபுறம் இழுக்கத் துவங்கின இது கண்டு நத்கீரர் வியப்பெய்தினார்.

அப்போது கொடூரமான பூதம் தோன்றி நத்கீரனை எடுத்துச் சென்று குகையில் அடைத்து, நத்கீரனோடு நூற்றுவரைத் தின்ன மனங்கொண்டு நீராடிவரப் பொய் கைக்குச் சென்றது. அப்போது நத்கீரர் உமையொடு பாகனின் இளைய மகனை யெண்ணித் துதிக்க, செவ்வேள் தோன்றி, தன் இடக்கையால் குகையை திறக்க அனைவரும் விடுத்லை பெற்றனர்.

நத்கீரர் தான் செய்த தவற்றை முருகனிடம் எடுத் துரைத்து கைலாய மலைக்குச் செல்லும் வழியைக் கேட்டார். 'ஈசன் கைலை மலைக்குச் செல் எனக் கூறினாரே யொழிய வடகைலையா தென்கைலையா எனக் கூறவில்லை. தென் கைலையைத் தரிசித்திருந்தால் இந்நோய் நீங்சியிருக்குமே எனக் குமரன் மனத்துள் எண்ணினான். பின், எதிரே தெரியும் குளத்தில் நீராடினால் தொழுநோய் போகும் எனஉரைத்தான் நத்கீரன் நீராட தொழுநோய் நீங்கியது. பொன்னிற கைலையும் அதன்பின் இறைவனும் எதிரே தோன்றினான். நத்கீரர் தன் தவறுணர்ந்து மனம் திருந்தி ஈசனைப் புகழ்ந்து போற்றினார்.



# இராமதாசர்

ஸ்ரீ ராமச்சந்திரன் மீது அன்பு கொண்டு இசைப்பாக்களையும் கீர்த்தனைகளையும் இயற்றி இராமனுக்குத் தாசர்களாக மாறினோர் எண்ணற்றோர். அவர்களுள் தெலுங்கு இலக்கியத்தில் சிறப்பிடம் பெற்றவர்கள் வரத இராமதாசர், எட்ல இராமதாசர், பத்ராச்சல இராமதாசர் எனும் மூவராவர். இராமதாசர் என மூவரும் பெயர்பெற்று இருந்தாலும் 'இராமதாசர்' என்றதும் நினைவுக்கு வருவது 'பத்ராச்சலம் இராமதாசு' ஒருவரே.

ஆந்திர மாநிலத்தில் 'கம்மம் மாவட்டத்தில்' 'நேலகொண்ட பள்ளி' எனும் கிராமத்தில் நீண்ட நாள் பிள்ளைப் பேறு இன்றி வருந்திய 'கஞ்செர்ல லிங்கென்னா' என்பவருக்கும் 'காமம்மா' வுக்கும் இறைவனின் திருவருளால் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அவன் பெயர் 'கோபன்னா பெற்றோர்கள் இராம பக்தியில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள். அதனால் கோபன்னாவும் இராம பக்தியில் திளைத்து பெருகினான். கோபன்னாவே பிற்காலத்தில் 'இராமதாசர்' எனப் பலராலும் அழைக்கப்பெற்றார்.

இன்று ஹைதராபாத் என அழைக்கப்பெறும் அதாவது அன்று பாக்யநகரம் என அழைக்கப்பெற்ற நகரத்தைத் தலைநகராகக் கொண்டு 'அபுல் ஹஸன் குதுப்ஷாஹீ' எனும் அரசனிடம் 'அக்கன்னா', 'மாதன்னா' எனுமிருவர் சேனாதிபதியாகவும் மந்திரியாகவும் இருந்தனர். அவர்கள் அரசாங்க அலுவல்களில் சிறப்புற்றுத் திகழ்ந்தனர். அதனால், அவர்கள் மீது அரசு மிகுந்த கவனம் செலுத்தி வந்தது. இவர்களுக்குக் கோபன்னா மருமக உறவினன். அவருடைய மாபன்களின் உதவியால் பத்ராசலத்திற்கு 'இராமதாசு' தாசில்தாராக நியமிக்கப் பெற்றார். கோபன்னா வரியாகப் பெற்ற பணத்தை

பொருளை அரசாங்கக் கஜனாவிற்குச் செலுத்தாது பத்ராச்சல இராமர் கோவிலுக்கும், அங்குள்ள இராமன், இலக்குமனன், சீதை ஆகியோர் அணிகலன்களுக்கும் செலவு செய்தார்.

இச்செய்தி தானிஷாவிற்கு எட்டியது. (அபுல் ஹஸன் குதுப்ஷாஹீ என்பவரின் மற்றொரு பெயர் தானிஷா) அவர் மிகுந்த கோபமுற்று, கோபன்னா இறை தொண்டிற்குச் செலவிட்ட முழுத்தொகையும் அரசுக்குச் செலுத்தவேண்டிய தொகையாகும். அதனை அவர் செலுத்தாததால் 12 ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

கோபன்னா சிறையில் அடைக்கப்பட்டார். பத்ராச்சல இராமன் கருடாழ்வான் மீது வந்து காப்பான் என எதிர் நோக்கிப் பயனில்லை. தானிஷாவின் சேவகர்கள் அடிக்கும் அடி கஞ்சொர்ல கோபன்னாவின் முதுகில் குறுதி வரச்செய்தது அப்போது திருமாலை எண்ணிக் கசிந்துருகிக் கண்ணீர் பெருக்கிப் பாடுகிறார். அன்று முதல் கோபன்னா இராம தாசராக மாறினார்.

''இக்ஷுவாகு குலத் திலகமே! தயரதன் மகனே! சனகனின் மருகனே! கோசலையின் மதலாய்! தாசரதியே இனியாவது உன் திருவாய் மலர்தல் கூடாதா? இந்தச் சேவகர்களின் அடியிலிருந்து என்னைக் காக்க உன்னைத் தவிர வேறு யாருளர்?

தன் இளவலுடனும் துணைவியுடனும் பத்ராச்சலத்தில் எழுந்தருளியிருக்கும் இராமச்சந்திரனே! உனக்காக நான் செய்த பணிகள் எண்ணற்றன. கோயிலைச் சுற்றிப் ப்ரகாரங்கள் கட்டினேன். அதற்குப் பத்தாயிர வராகன்கள் செலவாயிற்று. கோபுர மண்டபத்தைச் சுற்றிச் சுற்றுச் சுவர் கட்டினேன். அதற்கும் பத்தாயிர வராகன்கள் செலவாயிற்று.

மேலும் பரதன், சத்ருக்கினன், இலக்குமனன், சீதை ஆகியோருக்கு வைரப்பதக்கம், அரைஞாண் கயிறு, முத்துப் பதக்கம், புளியிலை வடிவமைந்த பதக்கம் ஆகியவற்றைச் செய்ய ஒவ்வொன்றிற்கும் பத்தாயிரம் வராகன்கள் செல வாயின. உனக்கு ஒளி பொருந்திய ஆணிப்பொன் முடியையும் வாகனங்களையும் செய்து கொடுத்தேன். அதற்கு இருபதா யிர வராகன்கள் ஆயின.

ஓ இராமச்சந்திரனே! நான் செய்ததையெல்லாம் நீயும் உன் சுற்றமும் மறந்தீர் போலும். இப்போது என் நிலை கண்டிரங்காது நீயோ சந்தோஷமுடன் திரிகிறாய். இதெல் லாம் எவர் பாட்டன் சொத்தென நினைத்தாய்? இவற்றை யெல்லாம் உன்னப்பன் தசரதனோ மாமன் சனகனோ அனுப்பவில்லை.

ஐய, திட்டினேன் என என்மீது கோபம் கொள்ள வேண்டாம். இந்த சேவகர்களின் அடி தாங்கலாற்றாது திட்டி னேன். அய்யா மன்னியும். சமுத்திரத்தில் கலந்த நதி நீராக என் வாழ்க்கை மாறியது. அனாதையை விட மிக இழிந்த நிலைக்கு வந்துவிட்டேன். நான் சர்க்கார் பணத்தைத் திருடி உனக்கு செலவு செய்த தொகையைத் திருப்பிக் கொடுத்து எனைக் காப்பாய் பத்ராச்சலப் பெருமாளே!''

இக்ஷ்வாகு குலதிலக இகவைந பலுகவே ராமச்சந்த்ர
நன்னு ரக்ஷிம்பகுநன்னு ரக்ஷகுலெரிங்க ராமச்சந்த்ர
சுட்டு ப்ரகாரமுலு சொம்புதோ கட்டிதி ராமச்சந்த்ர
ஆ ப்ரகாரமுகுபட்டே பதிவேலு வரஹாலு ராமச்சந்த்ர
பரதுநகு சேயிஸ்தி பச்சலபதகமு ராமச்சந்த்ர
ஆ பதகமுநகு பட்டே பதிவேல வரஹாலு ராமச்சந்த்ர
சத்ருகினகு நேனு சேயிஸ்தி மொலத்ராடு ராமச்சந்த்ர
ஆ மொலத்ராடிகிபட்டே மொஹரீலு பதிவேலு ராமச்சந்த்ர

லக்ஷ்மணுநகு ஜேயிஸ்தி முத்யால பதகமு ராமச்சந்த்ர
ஆ பதகமுநகு பட்டே பதிவேல வரஹாலு ராமச்சந்த்ர
சீதம்மகு சேயிஸ்தி சிந்தாகு பதகமு ராமச்சந்த்ர
ஆ பதகமுநகு பட்டே பதிவேல வரஹாலு ராமச்சந்த்ர
கலிகிதுராய் நீகு மெலுபுக ஜேயிஸ்தி ராமச்சந்த்ர
நீவு குலுகுசு திரிகெத எவரப்ப சொம்மனி ராமச்சந்த்ர
மீ தண்றி தசரத மஹாராஜு பம்பெந ராமச்சந்த்ர
லேக மீ மாம ஜனக மஹாராஜு பம்பெந ராமச்சந்த்ர
அப்ப திட்டிதினனி ஆயாசபடவத்து ராமச்சந்த்ர
ஈ தெப்பலகு ஓர்வக அப்ப திட்டிதினய்ய ராமச்சந்த்ர''

(பக்த இராமதாஸ கீர்த்தனலு-22)

விண்ணப்பம் செய்தும் பயனில்லை. ஒருமுறையாவது பத்ராச்சல இராமன் பேசமாட்டானா எனும் ஆதங்கத்தால் இவ்வாறு உரைக்கின்றார் இராமதாசர்.

''ஓ தந்தையே! பிரசித்திப் பெற்றவனே! வரங்கொடுக்கும் வள்ளலே! உன் பேச்சு பொன்னைவிட மிக அரிதாய்போய்விட்டதே. கனவிலும் உன் நாமம் என் நெஞ்சினிலிருக்க, நான் அழைத்தபோது பேசவில்லையே? உன் பேச்சு பொன்னைவிட மிக அரிதாய் போய்விட்டதே.''

மணலில் புரண்டு சேது கட்ட உதவிசெய்த அணிலுக்குக் கருணை மழை பொழிந்தானே! மிதிலை நகரத்தில் அடியெடுத்து வைத்துச் சிலையை பெண்ணாக்கியவனே! கசேந்திர யானையை முதலையிடமிருந்து காத்த பெருமானே! இவ்வாறு அணிலுக்கும், அகலிகைக்கும், ஆனைக்கும் அருள் புரிந்த வள்ளலே! உனக்கு என்னைக் காக்க மனமில்லையா?

''எந்த வேடிநனு நீகு சுந்தைந தயராது
பந்தமு சேய நேனெந்தடிவாடனு தண்றி''

''நான் எவ்வளவு வேண்டினாலும் உனக்கு என்மீது கொஞ்சம்கூட கருணை வராதா? என்போன்ற சிறியோன் உன்னோடு பந்தயம் போட வியலுமா? எனினும் கருணைக் கொண்டு உன் தாசனான என்னைக் காப்பாய்''.

இராமதாசரின் அந்த நேரடியான முறையீட்டினால் ஒரு பயனும் இல்லை. வேறு வழியாதென யோசிக்கின்றார். உடனே மனதில் ஓர் எண்ணம் உதிக்கின்றது. குழந்தைகள் சிலவற்றை தம் தந்தை டம் நேரடியாகக் கேட்க அஞ்சும். தமக்கு வேண்டியனைப் பெற தாயிடம் எடுத்துரைக்கும். அவள் கணவனுக்கு உரிய நேரத்தில் பக்குவமாக எடுத்துரைத்துத் தம் குழந்தைகளுக்கு வேண்டியவனவற்றைச்; செய்வாள். அதேபோன்று இராமதாசர் தன்நிலையைச் சீதாதேவிக்கு எடுத்துரைத்து, இராமனுக்குக் கூறுமாறு விண்ணப்பம் செய்கிறார்.

பல்லவி

என்னைக் காப்பாற்று எனக் கூறுவாய் - சீதாதேவி
என்னைக் காப்பாற்று எனக் கூறுவாய்

சரணங்கள்

என்னைக் காப்பாற்று எனக் கூறுவாய்
பெண்களில் சிரோமணி போன்றவளே
சனகனின் மகளே! சானகியே! (என்னை)

பக்கத்தில் படுக்கும் போதும்
கன்னம் தடவும் போதும்
உடன்சேர்ந்து மகிழ்ச்சியுடன் உள்ள போதும் (என்னை)

பூவுளங் கொண்ட பூபதி
உன்னைக் கூடும் வேளையிலும்
ஏகாந்தம் வகிக்கும் வேளையிலும் (என்னை)

பார்வதி வணங்கும் மாலுக்கு
பத்ராச்சல நாயக னுக்கு
உறங்கி விழிக்கும் போதுடன் (என்னை)

(ப.இ.கீ. 73)

இராமதாசரின் வேண்டுதல்களைக் கேட்ட ஸ்ரீமந் நாராயணன் தன் இளவல் இலக்குமனனுடன் நடுநசியில் தானிஷா அரண்மனைக்குச் சென்றான். உறக்கத்தில் ஆழ்ந் திருந்த தானிஷாவை எழுப்பி, ''நாங்கள் இராமதாசரின் சேவகர்கள் தங்களுக்கு அவர் செலுத்தவேண்டிய பணத்தைக் கொண்டு வந்துள்ளோம். ஏற்று, உரிய இரசீதைக் கொடுங் கள்'' என்றனர். 'உங்கள் பெயர் யாது? உங்களை அனுப்பி யவர் யார்?' எனத் தானிஷா இராமஇலக்குமரைக் கேட்டான் அதற்கு அவர்கள், ''எங்கள் பெயர் 'இராமன்ஜி', 'இலக்ஷ மன்ஜி.' எங்களை இராமதாசர் அரசாங்கப் பணத்தைச் செலுத்தி வரும்படி அனுப்பி வைத்தார்'' என்று கூறி உடனே மறைந்து போயினர்.

நவாபு தன் தவறுணர்ந்து இராமதாசரை விடுதலை செய்தான் தானிஷாவிற்குத் தோன்றி காட்சித் தந்த காகுத் தனும் இலக்குமனனும் தனக்குக் காட்சி தாவில்லையே என இராமதாசர் வருத்தினார். இறைவனின் அருள் உள்ளத்தை யெண்ணி, 'நமக்கு குறையேது' எனப் பாடினார்.

பல்லவி

நமக்குக் குறையேது ராமன் இருக்கையில்
சக்கர மேந்தியோன் பக்கதுணை இருக்கையில்

சரணங்கள்

சோமகா சுரனைக் கொன்ற மச்சவதாரப்
பெருமாள் இருக்கையில் (நமக்கு)

தேவர்களுக்காக மந்தாரமலையைத் தாங்கின
கூர்மவதாரப் பெருமாள் இருக்கையில் (நமக்கு)

இரணியத் தமையனிடம் இவ்வுலகைக் காத்த
வராக மூர்த்தி இருக்கையில் (நமக்கு)

பூமி சுவர்க்கம் இரண்டையும் அளந்த
வாமனி யிருக்கையில் (நமக்கு)

ஒவ்வொரு சத்திரியர்களைத் தண்டித்த
பரசுராமவதாரமிருக்கையில் (நமக்கு)

இலங்கை தசமுகனை தண்டித்த
தசரத ராமன் இருக்கையில் (நமக்கு)

யாதவருள் யது குலத்தினில்
அவதரித்த பலராமன் இருக்கையில் (நமக்கு)

கம்சன் அனுப்பிய பூதகியைக் கொன்ற
கிருட்டிணன் இருக்கையில் (நமக்கு

கலியுக யொளி பொருந்திய
கல்கி அவதார மிருக்கையில் (நமக்கு)

நாராயண தாசனைக் காத்த
ஸ்ரீமந் நாராயண னிருக்கையில் (நமக்கு)

(ப,இ.கீ. 57)

அல்லோரிடமிருந்து நல்லோரைக் காக்க திருமால் தச அவதாரம் எடுத்தார். அதுபோலதான் துன்புற்றபோது இராம

வதார வடிவில் வந்து காத்தார். அந்தத் தயரதன் எப் பேற்றினை உற்றானோ அதையே தான் பெற்றதாக எண்ணி மகிழ்கிறார்.

நாள்தோறும் வைகுந்தவாசன் மீது பல கீர்த்தனைகளைப் பாடி மாயோனைத் துதித்து வந்தார். பத்ரரச்சல மலையை யும் அங்குள்ள அழகையும் வர்ணிப்பதாக அமைந்தது. ஒரு கீர்த்தனை.

''ஓ பக்தர்களே! இங்கே பத்ராச்சல மலையையும் அங்கே கோதாவரி நதியும் பாருங்கள். மகிழ்ச்சியுடன் சீதை, இராம இலக்குமனனுடன் கொலுவிருக்கும் இம் மலையின் அழகைப் பாருங்கள். பொன்னொளி வாய்ந்த ப்ரகார கோபுர வாசல் அழகையும், ஒப்பில்லா சக்கரம் தகதக என ஒளிருவதையும் கலியுகத்தில் ஒரு வைகுந்தம் போல் இக்கோயில் இருப்பதைப் பாருங்கள்.''

(ப.இ.கீ. 19)

இராமதாசர் சிறைத் தண்டனை அனுபவித்ததற்கு ஒரு கதையும் உண்டு. முற்பிறப்பில் இராமதாசர் ஒரு சைவபக்தர். ஒரு நாள் ஒரு கிளியைப் பிடித்து வந்து அதற்கு ராமா! ராமா!! எனச் சொல்லிக் கொடுத்தார். அதுவும் அவ்வாறே நாள்தோறும் சொல்லிற்று. இதனைக் கேட்ட அவர் சைவ மதத்திலிருந்து மாறி வைணவ மதத்தில் சேர்ந்துவிட்டார். அன்று முதல் அவர் இராம பக்தரானார் முற்பிறப்பில் கிளியைக் கூண்டில் அடைத்ததால் இப்பிறப்பில் சிறை தண்டனை அனுபவித்தார்.

தியாகராஜ சுவாமிகளின் கீர்த்தனைகளைப் போன்றே இராமதாசர் கீர்த்தனைகளும் இனிமையும் சுவையும் சிறப்பும் உடையன. திராவிட நாட்டில் தியாகராஜ சுவாமி, க்ஷேத்தி ரய்யா ஆகியோரின் கீர்த்தனை புகழுக்கு இணையாக இராம

தாசரின் கீர்த்தனை புகழ் பெற்றது. இராமதாசரின் அழகான நந்தவனத்தில் பூத்த மற்றொரு பூ ''தாசரதீ! கருணா பயோநிதி'' எனும் முடியில் (மகுடத்தில்) இயற்றப்பெற்ற சதக இலக்கியமாகும்.

மகாபக்த சிரோமணியாகிய இராமதாசரின் வாழ்க்கை வரலாற்றை யக்ஷகானத்தில் இயற்றி மக்களிடையே பரப்பியவர் 'வரத இராமதாசு.' அவர் தன்னுடைய படைப்பில் இராமதாசரின் கீர்த்தனைகளை ஆங்காங்கே எடுத்தாண்டுள்ளார். இந்த இராம பக்தரின் கதையை 'சிங்கரி தாசு' என்பவர் கதா காலட்சேபம் (ஹரிகதை) வழி உலகுக்குத் தெரியப்படுத்தினார்.





இந்நூலாசிரியர் திருத்தணி திரு. கோவிந்தசாமி ரெட்டி யாருக்கும் திருப்பதி இராமம் மாளுக்கும் 3-6-1963 ல் மகனாக தோன்றினார்.

இவர் தணிகையம்பதி யிலுள்ள அருள்மிகு சுப்பிர மணிய சுவாமி அரசினர் கலைக் கல்லூரியில் இளங் கலை பொருளியல் கற்று முதல் வகுப்பில் தேறினார். அக்காலத்தில் கல்லூரி யிலேயே தமிழில் முதல் மதிப்பெண் பெற்றமைக்காக வள்ளல் சபாபதி ரெட்டியார் பரிசையும் பொருளியலில் மூன்றா மிடத்தைப் பெற்றமைக்காக கல்லூரி அறக்கட்டளை பரிசை யும் பெற்றவர். திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதியில் முதுகலையில் தமிழ் பயின்று, முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்று, இராமலிங்க சுவாமிகள் தங்கப்பதக்கத்தை யும், திருவள்ளுவர் தங்கப் பதக்கத்தையும் ஒருங்கே வென்றவர். அதே பல்கலைக் கழகம் இவருக்கு ''சிலப்பதி காரத்தில் இடம்பெறும் சமயங்கள்'' எனும் ஆய்வேட்டிற்கு 1987 ல் நிறைஞர் (எம்ஃபில்) பட்டத்தையும் ''பத்துப்பாட்டுச் சிலப்பதிகாரச் சமுதாய சமய ஒப்பாய்வு'' எனும் ஆய்வேட் டிற்கு 1990-ல் டாக்டர் (பிஎச்.டி) பட்டத்தையும் நல்கியது.

இவருடைய 'சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் சமயங்கள்' எனும் முதல் நூலைத் தமிழகம் ஏற்றுப் போற்றியது போன்று இந்த இரண்டாவது படைப்பையும் ஏற்று போற்றும் என எண்ணி வாழ்த்துகிறேன்.

அன்புடன்,

**கோவி. அரங்கநாதன்,**

திருத்தணி.